





## நடத்திய பரிசோதனைகள் நிரூபிக்கின்றன...

# பிஸ்கட் என்றால் இதுதான்—சுவைக்கும்

## வைட்டமின்களுக்கும் போஷாக்குக்கும் இதுதான்:

பிரிட்டானியா

# க்ளுக்கோஸ்-D



பிரிட்டானியா க்ளுக்கோஸ்-Dயுடன் மற்றொரு முன்னணி ரக க்ளுக்கோஸ் பிஸ்கட்டை ஒப்பிட்டுப் பார்த்த பரிசோதனைகளில் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்பட்டுவிட்டது: வைட்டமின் சத்திலும், மொத்த போஷாக்குத் தன்மையிலும் உயர்ந்தது க்ளுக்கோஸ்-D பிஸ்கட் தான், இனிமைக்கும், சுவைக்கும், மொறுமொறுப்புக்கும், அதிகமாக விரும்பப்படுகிறது. சக்தி வேண்டுமா— க்ளுக்கோஸையும் விட 20 சத விகிதம் அதிக சக்தியைத் தருகிறது க்ளுக்கோஸ்-D. பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D பிஸ்கட்— தித்திக்கும் சக்தி!




எனவேதான், வேறெந்த க்ளுக்கோஸ் பிஸ்கட்டையும் விட அதிக மக்களைக் கவர்ந்துள்ளது பிரிட்டானியா க்ளுக்கோஸ்-D

பிரிட்டானியா பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லின்டாஸ்-BBC-GL-10-140TH

# இசைக்கு மூன்று எளிய வழிமுறைகள்!

## செலவோ குறைவு

அதன் விலையை நோக்கும்போது புதிய எச்எம்வி ஃபியஸ்டா பாப்புலர் நிச்சயமாக மிகவும் சகாயமானது. நீடித்த உழைப்பிற்கேற்ப உறுதியும், திடமும் உடையது. கண்கவரும் இரு வண்ணக் காபினெட் கொண்டது. வசதிக்கேற்ப வாங்கி வாழ்நாள் முழுதும் இசைகேட்டு மகிழ வழியுண்டு.

## செவிக்கோ இனிமை

உள்ளேயிருக்கும் ஆம்பிளிஃபையர் மூலம் செவிக்கினிய சிறந்த ஒலியைப் பெறலாம். நீங்கள் விரும்பும் நிலையில் அமைத்துக் கொள்ள மூடியிட்ட ஒலிபெருக்கி.

## இசைத்தட்டிற்கோ மென்மை

இலேசான டோன்-ஆர்ம், ஊசிக்கும், இசைத்தட்டிற்கும் இதமாக இருப்பதால் தேய்மானத்தை மிகவும் குறைக்கிறது. எளிதாக மாற்றக் கூடிய ஊசி.

# புதியது!
# எச்எம்வி
# ஃபியஸ்டா
# பாப்புலர்

ரிக்கார்டு ப்ளேயர்.
ஏஸி மெயின்களுக்கும்,
பாட்டரிகளுக்கும் ஏற்றது.

**ரூபாய் 475 மட்டுமே.**

சிபாரிசு செய்யப்பட்ட அதிகபட்ச விலை எக்ஸைஸ் வரி உட்பட்டது. உள்ளூர் வரிகள் தனி.

GC. 8873

**சகாயமான விலையில்
விரும்பிய இசை கேட்கலாம்**




**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**
ஒலிமயமான எதிர்காலம்

சிறப்பாக
இயங்க எவரெடி
சூப்பர் 99 பாட்டரி
உபயோகியுங்கள்.



# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

**நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.**

1. மேற்புற அறைக்குள் ஊற்றப்படுகிறது குழாய் நீர்.

2. ஆய்வுக் கூடத்தில் பரிசோதனை பெற்ற கேண்டல் ஃபில்ட்டர் எல்லாக் கிருமிகளையும் நீரிலிருந்து வடிகட்டி ஒதுக்கிவிடுகிறது.

3. இணைப்புத் தடமற்ற, இரசாயனப் பொருள்களை எதிர்க்கும் தன்மையுள்ள, கீறல் விழ முடியாத எபாக்ஸி-பூசப் பெற்ற அலுமினியம் அறை.

4. கீழ்ப்புற அறையினுள் நூற்றுக்கு நூறு தூய நீர் குடிக்கத் தயாராகத் திரண்டிடும்.

உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள். இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்.



ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது, தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.



அசல் ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்களையே வாங்குகிறீர்கள் என்பதை உறுதி செய்ய மேற்புற அறைக்கு மேலுள்ள ப்யூரிடாஸ் முத்திரையைப் பார்த்து வாங்குங்கள். ப்யூரிடாஸ் பெயரும் பதிவு எண் 196501ம் அடிப்புற உலோகத்தின் மீது இருப்பதையும் கவனியுங்கள்.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.
43, நகீன்தாஸ் மாஸ்டர் ரோடு, பம்பாய் 400 001.

CHAITRA-BLS19 TAM Rev.

# பாரத் ஓவர்ஸீஸ் பாங்கில் உங்கள் டிபாசிட்டுகளுக்கு அதிகப்படி வட்டி கிடைக்கிறது




சதவிகிதம் கூடுதலான வட்டி
5 வருடங்கள் வரையிலுள்ள
டெர்ம் டிபாஸிட்டுகளுக்கு




சதவிகிதம் கூடுதலான வட்டி
சேமிப்பு கணக்குகளுக்கு

கீழ்கண்ட அட்டவணையை கவனமாகப் படியுங்கள்:

| | |
|---|---|
| சேமிப்புக் கணக்குகள் | $5\frac{1}{2}\%$ |
| **டெர்ம் டிபாஸிட்டுகள்** | |
| 14 நாட்கள் வரை | வட்டி இல்லை |
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | $3\frac{1}{4}\%$ |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரையான டிபாஸிட்டுகளுக்கு | $3\frac{3}{4}\%$ |
| 91 நாட்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 6 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $5\frac{3}{4}\%$ |
| 6 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 9 மாதங்களுக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $6\frac{1}{4}\%$ |
| 9 மாதங்கள் மற்றும் அதற்கு மேல், ஆனால் 1 வருடத்துக்கு குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $7\frac{1}{4}\%$ |
| 1 வருடம், மற்றும் அதற்கு மேல் ஆனால் 3 வருடத்துக்குக் குறைவான டிபாஸிட்டுகளுக்கு | $8\frac{1}{4}\%$ |
| 3 வருடம் மற்றும் அதற்கு மேல் ஆனால் 5 வருடம் (உட்பட) வரையான காலத்துக்குரிய டிபாஸிட்டுகளுக்கு | $9\frac{1}{4}\%$ |
| 5 வருடங்களுக்கு மேற்பட்ட டிபாஸிட்டுகளுக்கு | 10% |

ரெகெரிங் டிபாசிட்டுகளுக்கும் தக்கபடி அதிக வட்டி அளிக்கின்றன.

எங்கள் பாங்குக்கு விஜயம் செய்யுங்கள் —
எங்களது அன்பார்ந்த சேவை உங்களுக்கு திருப்தி அளிக்கும்.



## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: "ஆக்ஸ்ஃபோர்ட் ஹவுஸ்", மவுண்ட் ரோடு, சென்னை-600006

இந்தியா மற்றும் வெளிநாடுகளில் எல்லா முக்கிய நகரங்களிலும்
எமது கிளைக் காரியாலயங்களும், தொடர்பாளர்களும் உண்டு

இப்பொழுது நடைபெறுகிறது!

சென்னை....

வெலிங்டன் • அகஸ்தியா 70MM

ராக்ஸி • கமலா மற்றும் தென்னகமெங்கும்




# இதயமலர்

திரைக்கதை
வித்வான் லட்சுமணன்

டைரக்ஷன்:
ஜெமினிகணேஷ்
தாமரை மணாளன்

இசை:
M.S.விஸ்வநாதன்

JP

# ரிப்பேருக்காக அதிக செலவு செய்யாதீர்கள்

## தவறாமல் உபயோகியுங்கள், முச்செயல் புரியும்

3 IN 1

# த்ரீ-இன்-ஒன் ஆயில்



தையல் மெஷின், சைக்கிள், மின்விசிறி, பூட்டு, கீல் மற்றும் பல்வேறு வீட்டுப் பொருட்களைத் தவறாமல் மசகிட்டு பராமரிக்க வேண்டும். இல்லையேல், அவை துருப்பிடித்து பாழாகிவிடும்; தூசி அடைத்துக்கொள்வதால், தடங்கலின்றி அவை இயங்குவது பாதிக்கப்படும்.

எல்லா எண்ணைகளுமே ஒரே சீராகப் பலன் தருவதில்லை. த்ரீ-இன்-ஒன் ஆயில் தரமுயர்ந்த எண்ணை. அது 3 வழிகளில் செயலாற்றுகிறது.

✓ **மசகிடுகிறது**
—உங்கள் இயந்திரம் தடங்கலின்றி இயங்க உதவுகிறது.

✓ **சுத்தம் செய்கிறது**
—இது பிசுக்கை அகற்ற பிரத்தியேகத் திண்மையுடன் தயாரிக்கப்பட்டிருப்பதால், சீராகப் பரவி, தூசி அடைத்துக் கொள்ளாமல் தடுக்கிறது.

✓ **துருப்பிடிப்பதைத் தடுக்கிறது**
—இந்த எண்ணையில் மட்டுமே அலாதியான, துருவை எதிர்க்கும் பொருள் கலந்துள்ளது.

உங்கள் வீட்டிலுள்ள விலையுயர்ந்த பொருள்களைத் தவறாமல் சரியான மசகெண்ணை இட்டுப் பாதுகாத்திடுங்கள். த்ரீ-இன்-ஒன் ஆயில் உபயோகியுங்கள்.

# த்ரீ-இன்-ஒன் ஆயில்

## பாதுகாப்புக்கு—ஓர் இணையற்ற எண்ணை.



1976
செப்டம்பர் 12

நள ஆண்டு
ஆவணி 27

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## போடு புதிர்!





முப்பதிலிருந்து முப்பதைக் கழித்தால் விடை முப்பது ஆக வர வேண்டும். முடியுமா?

பத்தொன்பதிலிருந்து ஒன்றை நீக்கினால் மீதி இருபது வர வேண்டும். அது எப்படி?

— வி. எஸ். [illegible]

---

# நாற்பத்தி நாலு!

ஒரே ஒரு மசோதா மூலம் ஐம்பத்தி ஒன்பது மாறுதல்களை அரசியல் சாஸனத்தில் செய்ய உத்தேசித்திருக்கிறது அரசு. நாற்பத்தி நாலாவது மாறுதல் என்று ஒருமையில் பெயர் கொண்டிருந்தாலும் உண்மையில் ஏற்கனவே உள்ள நாற்பத்தி மூன்று தவிர இப்போது ஐம்பத்தி ஒன்பது மாறுதல்கள் புதிதாக நிகழப்போகின்றன! அப்படியென்றால் அதன் பாதிப்பும் விளைவுகளும் எவ்வளவு ஆழமாகவும் பரவலாகவும் இருக்கும் என்பதை யாரும் எளிதில் ஊகிக்கலாம்.

அரசியல் சாஸனம் ஒரு குறிப்பிட்ட கட்சியின் தனிச் சொத்து அல்ல. அது தேசத்திலுள்ள பல்வேறு தரப்பட்ட, பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த, பல்வேறு மதங்களையும் இனங்களையும் சேர்ந்த மக்களின் பொதுச் சொத்து. எனவே, அரசியல் சாஸனத்தில் இத்தனை மாறுதல்களைச் செய்வதற்கு முன் ஒரு தேசிய அமைப்பை உருவாக்கி விவாதிக்கச் செய்து சிபாரிசுகளைக் கோரிப் பெறுவதே சிறந்தது. சுவரண் சிங் கமிட்டியை இத்தகைய ஓர் அமைப்பாகக் கருத முடியாது.

44வது மாறுதலை அங்கீகரிக்கப் போகிற பாராளுமன்ற உறுப்பினர் எல்லோருக்குமே பதவிக் காலம் முடிந்து நீண்ட நாட்கள் ஆகிவிட்டன என்பதையும் மறப்பதற்கில்லை. இப்போதுள்ள பாராளுமன்றம் அரசு உத்தரவால் நீடிக்கப்பட்டுள்ள ஒன்று.

அரசியல் சாஸன மாறுதல்களில் பல வரவேற்கத்தக்கவை என்பதில் ஐயமில்லை. பொதுவாக மாறுதல்களை வரவேற்கும் அறிஞர்கள்கூட ஒரு சில அம்சங்களில் மிகவும் வருத்தம் அடைந்திருக்கிறார்கள். உதாரணங்களுக்குச் சில:

நம்பிக்கை இல்லாத் தீர்மானம் சட்டசபையில் நிறைவேற மொத்தம் உள்ள அங்கத்தினர்களில் பாதிக்கு மேல் அதற்கு ஆதரவாக வோட்டு செய்ய வேண்டும்; அன்றைய தினம் ஆஜராகியுள்ள அங்கத்தினரில் பாதிப் பேருக்கு மேல் வோட்டுச் செய்தால் போதாது என்பது ஒரு மாறுதல்.

எதிர்க்கட்சிகள் இணைந்து நம்பிக்கை இல்லாத் தீர்மானம் நிறைவேற்ற முடியாவிட்டாலும் அரசின் மசோதாக்களை நிறைவேறாமல் செய்து அரசின் நடவடிக்கைகள் ஸ்தம்பித்துப் போகச் செய்யலாம் அல்லவா? அதற்கு ஆஜராகியுள்ள அங்கத்தினர்களில் பாதிப் பேருக்கு மேல் வோட்டுச் செய்தால் போதுமல்லவா? இந்த முரண்பாடு முன்பிருந்த நிலையை அபிவிருத்திசெய்வதற்குப் பதில் மேலும் மோசமாக்கும்.

வேறொரு மாறுதலின்படி ஒரு சட்டம் அரசியல் சாஸனத்துக்குப் புறம்பானதா என்று பரிசீலிக்க சுப்ரீம் கோர்ட் மட்டுமே உரிமை பெற்றுள்ளது. புறம்பானது என்று தீர்மானிக்க மூன்றில் இரண்டு பங்கு நீதிபதிகள் அவ்வாறு தீர்ப்பளிக்க வேண்டும். இது நீதிமன்றங்களை மிகவும் பலவீனப்படுத்திவிடுவதாகிறது.

நாற்பத்தி நாலாவது மாறுதல் மசோதா நிறைவேறினால் நாடாளுமன்றம் நிறைவேற்றும் அரசியல் சாஸன மாறுதல்களை விசாரிக்க அல்லது பரிசீலிக்க இனி எந்த நீதிமன்றத்துக்கும் உரிமை இராது.

இன்று வரை சாசனத்தில் மக்களின் அடிப்படை உரிமைகளே முதல் சிறப்பும் முக்கியத்துவமும் பெற்றுள்ளன. ஆனால் உத்தேசித்துள்ள மாறுதலின்படி சாசனத்தின் ''வழிகாட்டும் கொள்கைகளுக்கு'' (Directive Principles) உட்பட்டே தனிமனிதன் சுதந்திரங்கள் இயங்கும். இந்த வழிகாட்டும் கொள்கைகள் தேசிய வாழ்வின் எல்லா அம்சங்களிலும் படர்ந்து பரவியிருப்பதால் சுற்றி வளைத்துப் பார்க்கும்போது அடிப்படை உரிமைகள் மக்களுக்கு இனி இல்லை என்றே கூறிவிடலாம்.

இப்படிப் பல குறைபாடுகளை உடையதாக அறிஞர்கள் பலர் கருதும் அரசியல் சாசன 44வது மாறுதலை நிறைவேற்ற அரசு அவசரப்படுவது அழகல்ல.

—(2-9-76ல் எழுதியது)

**கல்கி** மலர் 36 இதழ் 7



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# பாரதி விழாக்கள்!

☐ பாரதி நூற்றாண்டு நெருங்க நெருங்க வருஷா வருஷம் பாரதி விழாக் கோலாகலம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. இந்த ஆண்டு புது தில்லியில் தேசிய கலாச்சார ஸ்தாபனம் பாரதி விழாவைத் தேசிய கலாச்சார விழாவாகவே கொண்டாடவிருக்கிறது. சுறுசுறுப்பும் கலை ஆர்வமும் மிகுந்த தலைநகர் தமிழர்களுள் பிரபலமானவரான என்.பி. சேஷாத்திரியின் முயற்சியால் தபால் இலாக்கா, பாரதி வாரத்தின்போது தபால்களில் விசேஷ முத்திரை பதிக்க முன்வந்துள்ளது. (படம்) தேசிய கலாசார விழா மகத்தான வெற்றிபெற ஜெயபேரிகை கொட்டுகிறோம்!

☐ சென்னையில் பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம் தலைமையில் இயங்கும் பாரதியார் சங்கம், வழக்கம் போல் பாரதி விழாவை இரண்டு நாட்கள் கோலாகலக் கொண்டாட்டமாக எதிராஜ் மகளிர் கல்லூரி அரங்கில் நடத்துகிறது.

11ந் தேதி மாலை ஆளுநர் மேதகு மோகன்லால் சுகாதியா தொடங்கி வைக்கும் விழாவுக்குத் திரு ம. பொ. சி. தலைமை தாங்குகிறார். 12ந் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று காலை பத்து மணி முதலே கவியரங்கமும் கருத்தரங்கமும் விரிவுரை நிகழ்ச்சிகளும் உண்டு.




'பாரதி பாடல்களின் அருமை பெருமைகளை எவ்வளவு கேட்டால் தான் என்ன, அலுக்கவா போகிறது? குடும்பத்தோடு வாருங்கள்' என அழைக்கிறார் பாரதியார் சங்கக் காரியதரிசி திரு பகீரதன்.

கவியரசர் பாரதியின் கவிதை இன்பம் —
உந்தன்
கதிரொளியில் காண்பதென்ன
வெண்ணிலாவே—இந்தப்
புவியில் நீயும் தமிழனைப்
பிறந்ததுண்டோ — அவர்
புதுமைக்கவி மதுஅருந்தி மகிழ்ந்த
துண்டோ!

— அமரர் கல்கி

# திருமதி ஹா. கி. வாலம்

வாழ்நாளில் பெரும் பகுதியை நலிவுற்ற உடலுடன் போராடிக் கொண்டே, பக்தி, ஆன்மீகம், இலக்கியம், தேசப் பற்று இவைகளுக்கென்றே அர்ப்பணித்து வாழ்ந்த அருளரசி, கவிதாரத்தினம் ஸ்ரீமதி ஹா.கி. வாலம் அம்மையார் இறைவனடி சேர்ந்தார்.



பழம்பெரும் தேசபக்தர் திரு நா. ஹாலாஸ்யத்தின் மூத்த புதல்வியான இவர் தமிழ் மொழியில் மாத்திரமல்ல; வடமொழியிலும் ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும் அசாதாரணமாகக் கவிதை இயற்றும் திறன் படைத்தவர். கவியோகி சுத்தானந்த பாரதி ''வாலம் ஓர் வாலறிஞை'' எனச் சிறப்புறக் கூறினார்.

எழுதுவது மாத்திரம் இவருடைய தனிச் சிறப்பு அல்ல. நான்கு மொழிகளில் குன்றாத் திறமையுடன் குறையாத வேகத்துடன் சொற்பொழிவாற்றிய ஒரே பெண்மணி ஹா. கி. வாலம் என்பதைக் குறித்துப் பெண் குலம் என்றென்றும் பெருமைப்படும். பல நூல்களிலிருந்து பல மொழிகளில் இவர் அருவியாக மேற்கோள்களை எடுத்துக் காட்டுவார்.

வாழ்நாள் முழுதும் இவருடைய இலக்கியப் பணிகளில் ஒத்துழைத்த இவருடைய கணவர் பி. எஸ். கிருஷ்ணசுவாமிக்கும், ஏனைய சுற்றத்தார்களுக்கும் நமது ஆழ்ந்த அநுதாபங்கள்.

ராஜாஜி சிந்தனை

## தேர்தல் செலவுகள்

வேட்பாளர் அல்லது கட்சியுடைய தேர்தல் செலவுகள் கணிசமாகக் குறைக்கப்பட்டாலன்றி இந்தியாவில் நேர்மையான நிஜமான ஜனநாயகத்துக்கு வழி பிறக்காது. நான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேலாகக் கூறி வருவதை மீண்டும் சொல்கிறேன். மத்திய அரசுக் காரியாலயங்களில் பொறுப்பில் இருப்பவர்களுக்கு இதைப் பற்றியெல்லாம் சிந்திக்க விருப்பம் இல்லை. அவர்கள் தலைக்கு மேல் இருக்கும் அன்றாட அலுவல்களில் மூழ்கிக் கிடக்கிறார்கள். இந்த மிக முக்கியமான அம்சம் பற்றி முழுமையாகவும் யதார்த்த ரீதியிலும் யோசிக்க அவர்களுக்கு நேரமோ சக்தியோ இல்லை.

—ராஜாஜி நினைவு மலர்









சென்ற சீசனுக்கு இந்த ஆண்டு 'காஸ்' விலை அபரிமிதமாக அதிகரித்துள்ளது!






தேர்ந்தெடுங்கள் இதோ, புதுமையாக மலரும்
கோலாகல டிசைன்களின் வரிசை.



கட்டாவ்
பெரிகோலா சேலைகள்
'டெரீன்'

Creative Unit-A 2427-Tam.



# ஜீவகாருண்யம்




ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்.

விநோபா 'சிரம் தான்'(சிரம தானம்) என்று சொல்லி வருகிறாரே, இதைத்தான் பூர்த்த தர்மம் என்று நம் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. இந்தச் சரீர கைங்கரியத்தைச் சகல ஜனங்களும் வாரத்தில் ஒரு நாளாவது பண்ண வேண்டும் என்பது என் ஆசை. யாராயிருந்தாலும் வாரத்துக்கு ஒரு நாள் ஹாலிடே (விடுமுறை) இருக்கிறதல்லவா? அன்றைக்கு லோகோபகாரமாகச் சரீரத்தால் ஒரு பொதுப் பணி செய்ய வேண்டும்.

அவரவருக்கும் எத்தனையோ குடும்பக் காரியங்கள் இருக்கும் என்பது வாஸ்தவம்தான். இந்தக் காரியங்களை லீவு நாளில் பார்த்துக் கொள்ளலாம்என்றுதான்வைத்திருப்பார்கள். ஆனாலும் இதோடு கூட பார்வதி — பரமேச்வரனின் பெரிய லோக குடும்பத்துக்கும் தன்னாலானதை ஒரு 'ட்யூட்டி' (கடமை)யாகச் செய்யத்தான் வேண்டும். இதற்காக அதையும் விடக் கூடாது. அதற்காக இதையும் விடக் கூடாது. கொஞ்ச நேரமாவது இந்தப் பரோபகாரப் பணி செய்ய வேண்டும்.

சரீர கைங்கரியம் உடம்புக்கே ஒரு நல்ல exercise (அப்பியாசம்). அதோடு பரோபகாரமாகப் பண்ணுகிறபோது மனசுக்கும் அலாதியான உற்சாகம் இருக்கும். முடிவில் சித்த சுத்தியைத் தரும்.

உதிரி உதிரியாக அவரவர்கள் செய்வதை விட எல்லோரும் சேர்ந்து செய்தால் ஜாஸ்தி உபகாரம் பண்ண முடியும். நகரமானால் ஒரு பேட்டையில் இருப்பவர்களெல்லாம் சேர்ந்து செய்யலாம். கிராமமானால் நாலு கிராமத்து ஜனங்கள் ஒன்றுகூடிப் பண்ணலாம்.

பூர்த்த தர்மத்தில் தீர்த்த தர்மத்தை விசேஷமாகச் சொன்னேன். கிராமப்புறங்களில் எல்லாரும் சேர்ந்து குளம் வெட்டலாம்; இருக்கிற குளங்களைத் தூர் வாரிச் சுத்தம் பண்ணலாம். பெரியவன் — சிறியவன் என்றில்லாமல் எல்லோரும் சேர்ந்து பண்ணுவது முக்கியம். கோடீச்வரனானாலும், பெரிய பண்ணையாரானாலும், அவனும் மண்வெட்டி கொண்டு வந்து போட வேண்டும். சாஸ்திரங்களில் அப்படித்தான் எழுதியிருக்கிறது. அஸ்திவாரக் கல் நாட்டுவது, டேப் வெட்டுவது முதலானதுகள் சாஸ்திரத்தில் இல்லை. எத்தனை பெரியவனானாலும் அவனும் வாஸ்தவமாகவே உடம்பு வேர்க்க மற்றவர்களோடு சரி சமமாகப் பூர்த்த தர்மம் பண்ண வேண்டும். ரதோத்ஸவத்தில் எல்லா ஜாதிக்காரர்களும் ஒன்றாகச் சேர்ந்து வடம் பிடித்து இழுக்கிற மாதிரிதான் இதுவும்.

ரதோத்ஸவத்தை விட்டுவிட்டு ஸோஷல் ஸர்விஸுக்கு வாருங்கள் என்று சொல்வது தப்பு. நமக்கு இரண்டும் வேண்டும். இப்போதெல்லாம் தெய்வ காரியத்தை விட்டுவிட்டுச் சமூக சேவை செய்ய வேண்டும் என்பவர்கள் திருமூலர் திருமந்திரத்தை மேற்கோள் காட்டுகிறார்கள்.

நடமாடக் கோயில் நம்பர்க்கொன்றீயில்
படமாடக் கோயில் பகவற்கதாமே

'மக்களுக்குச் செய்கிற தான தர்மங்கள் பகவானுக்குப்பண்ணுகிற பூஜையாகும்' என்று இதற்கு அர்த்தம். ஸ்ரீமத் பாகவதத்திலும் பகவான் லோகத்தை யெல்லாம் பகவத் ஸ்வரூபமாகப் பார்த்து சேவை செய்வதும் பூஜைதான் என்கிறார்.

இப்படிச் சொன்னதால் பூஜை கூடாது, உற்சவம் கூடாது என்று அர்த்தமில்லை. பரோபகாரம் பண்ணி ஜனங்களுக்குச் சாப்பாடும், துணியும் மற்ற சௌகரியங்களும் கிடைக்கிற மாதிரி செய்துவிட்டு, அவர்கள் இன்று இன்று என்றைக்கோ ஒரு நாள் பரமார்த்த சத்தியத்தைத் தெரிந்து கொள்ளாமலே சாகிற மாதிரி விட்டு விட்டால் என்ன பிரயோஜனம்? திருமூலரோ கிருஷ்ணனோ இப்படி விட்டுவிட வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறவர்கள் அல்ல. சாச்வத பிரயோஜனம் பகவானைக் காட்டிக் கொடுப்பது தான். இந்த சரீரம் உள்ளபோதே அவனைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான் இந்த உடம்புக்குச் சோறு போட்டு, இதற்கு வியாதி வந்தால் சிகித்சை பண்ணி, அறிவை வளர்க்கும்படியான கல்வியைத் தந்து உபகாரம் பண்ணுவதெல்லாம். ஆலய

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

தரிசனம், உத்ஸவாதிகள் முதலியவற்றை நன்றாக அநுபவித்துப் பயன் அடைவதற்குத் தான் மற்ற ஸோஷல் சர்வீஸ் எல்லாமே. அதனால் எல்லோருமாகச் சேர்ந்து ஆலயத் திருப்பணி செய்தால், மெய்வருந்தி ஒரு கோயிலுக்கு மதில் கட்டினால், அதுவும் மகா பெரிய சிரமதானம்தான்.

ஆத்மார்த்தமாகவே பல சமூக சேவைகள் உண்டு. உதாரணமாக, மகான்களுடைய நூல்கள், மகான்களைப் பற்றிய நூல்கள், ஸ்தோத்திரக் கிரந்தங்கள் முதலியவற்றை அச்சிட்டு ஜெயிலில் இருக்கிறவர்களுக்கும் ஆஸ்பத்திரியில் இருக்கிறவர்களுக்கும் இலவசமாகக் கொடுப்பது ஒரு பெரிய பரோபகாரம். அந்தந்த அதாரிடி (நிர்வாகிகள்) அநுமதித்தால் இந்த இடங்களில் மத சம்பந்தமான பேச்சு, பஜனை, காலக்ஷேபம் இதெல்லாமும் நடத்தலாம்.

இதனாலெல்லாம் என்ன பெரிய பிரயோஜனம் வந்துவிடப் போகிறது என்று நினைக்கக் கூடாது. முன்னேயே நான் திரும்பத் திரும்பச் சொன்ன மாதிரி நம் மனசின் அகங்காரமாவது நிச்சயமாகக் குறையும். எல்லாரும் சேருவது என்பதால் சமூகத்தில் நல்ல சௌஜன்யம் உண்டாகும். எல்லாரும் சேர்ந்து குளம் வெட்டினால், அப்போது கொஞ்சம் கொஞ்சம் நம் அகம்பாவத்தையும் வெட்டி எடுக்கிறோம். குளத்தில் ஜலம் வருவதை விட நம் நெஞ்சில் கொஞ்சம் ஈரம் வருகிறதே, அது போதும். இந்த ஈரம், அன்பு, அருள், பரமாத்ம ஸ்வரூபத்தை நாம் உணருவதற்குப் பிரயோஜனமாகும். பகவானிடத்தில் பக்தி வர வேண்டும், அவனருள் கிடைக்க வேண்டும் என்றால் எப்படி வரும்? பரோபகாரம் பண்ணி மனசு பக்குவமானால்தான் நிஜ பக்தி வரும், ஈச்வரானுக்கிரஹமும் வரும்.

அநாதைக் குழந்தைகளின் சம்ரக்ஷணை, திக்கற்ற ஏழைகளுக்குச் சேவா சதனம் வைப்பது, பிராணி வதையைத் தடுப்பது, பசு வளர்ப்பது, பசிக் கஷ்டம் யாருக்கும் வராமல் உபகரிப்பது என்றிப்படி எந்தெந்த விதத்தில் முடியுமோ அப்படி நம் அன்பை, வெறும் பேச்சாக இல்லாமல், காரியத்தில் காட்டினால், பரமேச்வரனின் அன்பு நமக்கும் கிடைக்கும்.

ஈச்வரானுக்கிரஹம் எங்கேயும் பிரவாகம் மாதிரி ஓடிக் கொண்டேதான் இருக்கிறது. ஆனால் நம் மனசு கல்லாக இருந்தால், கல்லுக்குள் ஜலம் ஊறுத மாதிரி அநுக்கிரஹத்தை நம்மால் தெரிந்து கொள்ள முடியவில்லை. அதுவே ஒரு துணியை வெள்ளத்தில் போட்டால் அது தானே விரிந்து ஜலத்தை இழுத்துக் கொள்கிறது. துணியை வெளியே இழுத்துப் பிழிந்தால் ஜலம் கொட்டுகிறது. கல் மனசைப் பரோபகாரத்தினால் இப்படி லேசாகத் துணி மாதிரி ஆக்கிக்கொண்டால் எப்போதும் நம்மைச் சூழ்ந்திருக்கிற அநுக்கிரகத்தை நன்றாக உறிஞ்சிக் கொள்ளலாம்.

(தொடரும்)



ஒரு க்ளாக்ஸோஸ்-D கதை

# களைப்பு மிக்க வாழ்க்கை






















நீங்கள் களைப்புறுவதற்குக் காரணம்— உங்கள் உடல் க்ளூகோஸை இழப்பதுதான். க்ளாக்ஸோஸ்-D உங்களுக்கு உடனடியாகச் சக்தியளிக்கிறது. அது வைட்டமின்-D மற்றும் கால்ஷியம் பாஸ்பேட்டுகள் செறிந்த தூய க்ளூகோஸ் பவுடர்.

100 கிராம் பேக்கின் விலை ரூ 2.09 மட்டுமே. (உள்ளூர் வரிகள் தனி).



## க்ளாக்ஸோஸ்-D

## உடனடி சக்திக்கு



இந்தியா சிமெண்ட்ஸ் ஆலையின் ஒரு தோற்றம்.

# நிர்மாணப் பணியில் நாராயணன்

நூற்றி நாலு வயதான ஜனாப் ஷேக் மொகிதீன் ராவுத்தர் திருநெல்வேலிக்குப் பக்கத்தில் தாழையூற்றுக் கிராமத்தில் வாழ்கிறார். அவர், அந்த வட்டாரமெல்லாம் வெறும் கல்லும் முள்ளும் நிறைந்த கருவேலங் காடாக இருந்த நாட்களை அறிவார். இன்று அப்பகுதி தொழில் வளமும் பொருளாதாரச் செழிப்பும் நிரம்பிக் கலகலப்பும் சுறுசுறுப்பும் மிக்கதாய் விளங்குவதையும் பார்க்கிறார்.

இந்த முன்னேற்றங்களுக்கு மூலகாரணமான திரு எஸ். என். என். சங்கரலிங்க அய்யரை நினைக்கும்போதெல்லாம் அவர் கரங்கள் அவரையும் அறியாமல் இணைந்து குவிகின்றன. ''எங்க எஜமான் அந்த நாளிலே மாட்டு வண்டியில்தான் வருவாரு. தாகசாந்திக்கு ஒரு வெள்ளிக் கூஜாவிலே தண்ணீர் மட்டும் கொண்டு வருவாரு. காடு மலைப் பிரதேசங்களை யெல்லாம் கால்நடையாக அலைந்து திரிந்து சுற்றுவாரு, கல்லுங்களைப் பொறுக்கி ஆராய்வாரு.''

'கல்'லென்று மொகதீன் ராவுத்தர் குறிப்பிடுவது 'லைம் ஸ்டோன்' என ஆங்கிலத்தில் வழங்கும் சுண்ணாம்புப் பாறைகளை. அவை மலை மலையாக அங்கே சிமெண்ட் தயாரிப்புக்கு ஏற்ற தரத்தில் கிடைத்ததால் ஓர் ஆலையை அங்கே நிறுவலாம் என்ற எண்ணம் சங்கரலிங்க அய்யருக்குத் தோன்றியது என்பது ராவுத்தருக்குத் தெரியும்.

ஆனால் அவருக்குத் தெரியாத விஷயம் என்னவென்றால் சங்கரலிங்க அய்யருக்கு அந்தத் துணிவு ஏற்படப் பக்கபலமாக இருந்தவர் திரு கே. எஸ். நாராயணன்-சங்கரலிங்க அய்யரின் மூத்த மகன் என்பது.

தகப்பனார் இந்தியா சிமெண்ட்ஸ் ஆலையை ஆரம்பித்தார், மகன் அதில் வந்து சேர்ந்து கொண்டார் என்ற முறையில் நாராயணன் வரவில்லை. ஏராளமான தொழில் அனுபவத்தையும் செயலாற்றலையும் இன்றியமையாத மூலதனமாக உடன் கொணர்ந்தார். எப்படி என்பதற்கு அவர் வாழ்க்கைச் சம்பவங்களை நோக்க வேண்டும்.

திரு சங்கரலிங்க அய்யருக்குப் பரம்பரையாக வந்த தொழில் உண்டியல் கடை. அதாவது வட்டிக்குப் பணம் தருவது. 'மினி பாங்க்' எனலாம். மகன் நாணுவும் தந்தையின் விருப்பத்துக்கு இணங்க அந்தத் துறையிலேயே பயிற்சி பெற ஒரு பாங்கில் குமாஸ்தாவாகச் சேர்ந்தார். அனுபவக் கல்வி அரிச்சுவடியிலிருந்து ஆரம்பமாயிற்று. நாராயணனின் ஆற்றல் அதில் பளிச்சிட்டாலும் மனம் அதில் லயிக்கவில்லை. உற்பத்திக்கு உதவுபடியான தொழில் ஏதேனும் நடத்த வேண்டும் என்ற ஆவல் கட்டுக்கடங்காமல் எழுந்தது.

அச்சக மை தயாரிப்புக்கு திரு சங்கரலிங்க அய்யர் ஒரு தொழிலகம் தொடங்கியபோது நாராயணனின் தொழிலார்வத்துக்கு வடிகால் கிடைத்தது. அப்போது கல்கி பத்திரிகை ஆரம்பித்திருந்த புதிது. ஒரு சமயம் அவசரத் தேவைக்காக நாராயணன் தாமே நள்ளிரவு வரையில் இயந்திரங்களை இயக்கி மை தயாரித்துக் கொடுத்ததைக் கல்கி காரியாலய நிர்வாகிகள் இன்றளவும் நன்றியோடு நினைவு கூர்கிறார்கள்.

வெள்ளமாய்ப் பெருகிய நாராயணனின் தொழிலார்வம் பிளாஸ்டிக்





அரை இயந்திரத்தின் வாய் அரைத்துப் பொடி செய்யச் சுண்ணாம்புப் பாறைகளைக் கொட்டுகிறது 'டிப்பர்' லாரி.



"கெம்பிளாஸ்ட்" தொழிலகம்.



எரிமலைக் குழம்பாக கால்ஷியம் கார்பைடு டிராலிக்குள் பொங்கி வடியப் போகிறது!

தொழிலகம், ரப்பர் தொழிலகம் என்று பல கிளைகளில் பாய்ந்தது. அது யுத்த காலம். தொழில்கள் தொடங்கத் தகப்பனாரின் ஆதரவும் மூலதனமும் இருந்தாலும் இயந்திரங்கள் எளிதில் கிடைக்காத சமயம். லேத் போன்ற ஓரிரு இயந்திரங்களைத் தாமே தயாரித்தார் திரு கே. எஸ். என். வேறு சிலவற்றை அரும்பாடு பட்டுப் பெற்றார். அவற்றைக் கொண்டு யுத்த முயற்சிகளுக்கு உதவும் வகையில், முக்கியமாக, விமானப் படைக்கும் ரயில்வேக்கும் தேவையானவற்றை உற்பத்தி செய்து தந்தார். ஒரு நாள் கோவை விமான நிலையத்தில் ஒரு விமானம் இறங்கும்போது டயர் வெடித்து விட்டது. மாற்று டயர் இருக்கவில்லை. விமானப் படையினர் திரு நாராயணனை யோசனை கேட்டனர். அவர் தமது தொழிலகத்தில் காற்றடிக்க அவசியம் இல்லாத கெட்டி ரப்பர் டயர் ஒன்றைத் தயாரித்துப் பொருத்தித் தந்தார். விமானம் வெற்றிகரமாக ரன்வேயில் ஓடி உயரே கிளம்பிப் பறந்து சென்றது. "ஸாலிட் ரப்பர் டயருடன் கிளம்பிய ஒரே விமானம் நமது தேசத்தில் அதுவாகத்தான் இருக்கும்." — புன்னகை நெளிய அந்தப் பழைய சம்பவத்தை நினைவுகூர்கிறார் திரு கே. எஸ். என்.

அது முதல்தரமான ஓர் ஏற்பாடாக இல்லாதிருக்கலாம். ஆனால் யுத்த நெருக்கடியில் தாமதத்தைத் தவிர்த்துப் பேருதவி புரிந்தது. அதுவே கே. எஸ். என்.னின் சிந்தனை சக்திக்கும் செயலூக்கத்துக்கும் ஓர் உதாரணமாகவும் அமைகிறது.

ஓர் எடுத்துக்காட்டு போதாது என்றால் திரு நாராயணன் கோவையில் கால்ஷியம் கார்பைடு தொழிலகம் ஒன்று நடத்த வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளான கதையைச் சொல்லலாம்.

யுத்த நாட்களில் பெட்ரோல் கிடைப்பது அரிதாயிருந்ததால் நாராயணன் தமது தொழிலகத்துக்குக் குதிரை சவாரி செய்து போவார். போகும் வழியில் ஒரு கால்ஷியம் கார்பைடு தொழிலகம் ஆரம்பமாக இருந்தது. அதை நிர்வகித்து வந்தவர்கள் பல தவறுகளைச் செய்வதையும் அதனால் அல்லலுறுவதையும் கவனித்து வந்தார் நாராயணன். ஒரு நாள் அவர்களிடம் பேச்சுவாக்கில் இன்னின்ன சீர்திருத்தங்களைச் செய்தால் தொழிலகத்தைச் சிரமமின்றித் தொடங்கி நடத்தலாம் என்று எடுத்துச் சொன்னார். பார்த்தார்கள் நிர்வாகிகள். இவ்வளவு நல்ல யோசனைகளைச் சொல்கிறீர்களே; இந்தத் தொழிலகத்தை நீங்களே ஏற்று அவற்றை ஏன் அமல்படுத்தக் கூடாது என்று கேட்டு அவர் தலையிலேயே கட்டிவிட்டு நழுவிக் கொண்டார்கள்!

இந்தியா சிமெண்ட்ஸ் ஆலையை திரு சங்கரலிங்க அய்யர் தொடங்க நினைத்தபோது ஏற்கனவே பெற்றிருந்த பலவிதமான தொழில் அனுபவங்களுடன் சிமெண்ட் தயாரிப்பில் விசேஷத் தேர்ச்சியும் பெற உடன்

# கி. ராஜேந்திரன்



நூற்றி நாலு வயதான ஷேக் மொஹிதீன் ராவுத்தர்.

தொழிலாளர் குடும்ப வருவாயை அதிகரிக்கும் அப்பளம் தயாரிப்பு நிலையம்.



மார்க்குக்குச் சென்ருர் திரு கே. எஸ். என். தலைநகர் கோபன்ஹேகனிலுள்ள ஸ்மிட் அண்டு கம்பெனிதான் தாழையூற்று சிமெண்ட் ஆலைக்கு வேண்டிய இயந்திர உபகரணங்களை வழங்கி அவற்றின் இயக்கத்தையும் சில காலம் வரை கவனித்து வந்தது. எனவே, நாராயணன், அவர்களிடமே போய் சிமெண்ட் ஆலை அமைப்பின், சிமெண்ட் தயாரிப்பின் நுணுக்கங்களையெல்லாம் அறிந்து வந்தார்.

டென்மார்க் நாட்டுடன் அன்று ஆரம்பித்த தொடர்பு படிப்படியாக வளர்ந்து, உயர் மட்டங்களிலும் நட்பாக மலர்ந்து, நல் லெண்ணம் மணக்கவே இன்று திரு கே. எஸ். நாராயணன் டென்மார்க் அரசின் கௌரவ தூதராகத் தென் இந்தியாவுக்கு நியமிக்கப்பட்டுச் சிறப்புப் பணியாற்றி வருகிருர். எவ்வளவு பெரிய பெருமை!

டென்மார்க் மட்டுமின்றி உலகமே சுற்றிய வாலிபர்தாம் திரு கே. எஸ். என். நாள்தோறும் டென்னிஸ் விளையாடுவதால் ஐம்பத்தேழு வயது இளைஞராக விளங்கும் இவர் நார்வே சென்றபோது நவீனமான ஒரு கால்ஷியம்கார்பைடு ஆலை நிறுவ எலெக்ட்ரோ கெமிஸ்க் என்ற நிறுவனத்தின் ஒத்துழைப்பைக் கோரிப் பெற்ருர். கோவையில் ஏற்கனவே இண்டஸ்ட்ரியல் கெமிகல்ஸ் என்ற பெயரில் நாராயணன் நடத்தி வந்த கால்ஷியம் கார்பைடு தொழிலகம் தாழையூற்றுக்கு மாற்றப்பட்டு இந்தியா சிமெண்ட்ஸ் ஆலைக்குப் பக்கத்திலேயே நார்வே நிறுவனத்தின் ஆரம்ப கால ஒத்துழைப்புடன் மிக நவீனமான முறையில் இயங்கத் தொடங்கியது.

திரு சங்கரலிங்க அய்யர் தொடங்கிய தொழில்களுக்கெல்லாம் துணை நின்று யோசனைகள் கூறி உதவியவர் ஆருயிர் நண்பர் ஸ்ரீ டி. எஸ். நாராயணசுவாமி — தமிழகத்தின் தொழில் வளர்ச்சி சரித்திரத்தில் நிலையான இடம் பெற்று அதிக காலம் நிலைக்காமல் சென்றுவிட்டவர். இதன் மறுபுறமாக ஸ்ரீ டி. எஸ். நாராயணசுவாமி முயற்சி எடுத்துத் தோற்றுவித்த தொழில்களுக்குச் சங்கரலிங்க அய்யர் கொடுத்த ஆதரவு கொஞ்சம் நஞ்சமல்ல.

எனவே ஸ்ரீ டி. எஸ். நாராயணசுவாமி பொறுப்பேற்று மேட்டூரில் ஆரம்பித்த கெமிகல்ஸ் அண்டு பிளாஸ்டிக்ஸ் தொழிலகத்திலும் சரி, ஸவுத் இந்தியா ஷிப்பிங் கார்ப்பொரேஷனிலும் சரி சங்கரலிங்க அய்யருடன் கே. எஸ். நாராயணனுக்கும் பெரும் பங்கு இருந்தது.

இதன் பிறகு திரு கே. எஸ். நாராயணன் விரும்பி ஈடுபட்ட தொழில்கள், நெருக்கடியில் உதவப் போய் நிர்வாகத்தில் பங்கேற்கநேர்ந்த தொழில்கள், அரசாங்கமாகப் பார்த்து 'நீ கவனித்துக் கொள்' என்று பணித்த தொழில்கள், இவரது ஆதரவையும் கவனத்தையும் கோரி நிற்கும் சமூகப் பணி நிறுவனங்கள், தொழில்—வர்த்தக—பொருளாதார அமைப்புக்கள் என்று அனைத்தையும் பட்டியல் போட ஆரம்பித்தால் இந்தப் பக்கம் காணுது.

இப்படிப் பொறுப்புக்கள் பலப் பலவாக வளர்ந்து விட்டதால் ஒவ்வொன்றையும் தாமே நிர்வகிக்காமல், 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்ருய்ந்து அதனை அவன்கண்' விடுகிருர் நாராயணன்.

சங்கர் நகரில் இந்தியா சிமெண்ட்ஸ், இவர் சகோதரர் திரு கே. எஸ். ராமன் நிர்வாகத்தில் சிறந்த ஆலையாக மட்டுமின்றிப் பசுஞ்சோலையாகவும் விளங்குகிறது. ''காலை ஏழு மணிக்கெல்லாம் குவாரியில் எங்களுடன் இருப்பார் எங்கள் ஜி. எம்.'' என்று இந்தியா சிமெண்ட்ஸ் தொழிலாளி பெருமையுடன் கூறிக் கொள்ளும் வகையில் சிரத்தையுடன் பணியாற்றுகிருர்.

இண்டஸ்ட்ரியல் கெமிகல்ஸ் மற்றொரு சகோதரர் திரு கே. எஸ். காசிவிசுவநாதனின் கண்ணும் கருத்துமான நிர்வாகத்தில் வெற்றி நடை போடுகிறது.

கெம்பிளாஸ்ட் தொழிலகத்தில் நிர்வாக டைரக்டராகத் திரு எஸ். சங்கரனும், அவருக்கு உறுதுணையாகத் திரு எஸ். ராமசாமி, திரு மகாலிங்கம், திரு காளிதாஸ் ஆகியோரும் இருக்கிருர்கள்.

தகப்பனுர் ஆரம்பித்து வைத்த தொழில் துறை ஈடுபாட்டைப் பல வகையிலும் வளர்த்துக் கொண்டு அகலமாகக் கால் வைத்தாலும் அழுத்தமாக ஊன்றிப் பிறருக்கு வழிகாட்டியாகவும் விளங்குவதால்தான் ஹிந்துஸ்தான் சேம்பர் ஆஃப் காமர்ஸ் தலைவராக திரு கே. எஸ். நாராயணன் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிருர்.

இவ்விதம் வெற்றிகளுக்கு மேல் வெற்றியாகக் குவித்துள்ள நாராயணன் மெட்ரிக்குக்கு அதிகமாகப் படித்ததில்லை என்பது பலருக்கு வியப்பாக இருக்கும். தகப்பனுர் சங்கரலிங்க அய்யரும் அப்படித்தான், அதிகம் படித்ததில்லை — சம்பிரதாய முறையில். ஆனுல் எந்தப் பள்ளியும் கல்லூரியும் தர முடியாத அனுபவ அறிவைப் பெற்றவர் திரு நாராயணன். சங்கரலிங்க அய்யர் வீட்டில் ஆளுயரப் புத்தக அலமாரிகள் பலவும் நிரம்பி இடம் போதாமல் தரையிலும் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். மகன் நாராயணனும் அப்படியே தொழில் நுணுக்க நூல்கள் முதல் டெய்லர் கால்டுவெல், இர்விங் வாலஸ் நாவல்கள் வரை படித்துப் பயன்பெறுகிருர், ரசித்து மகிழ்கிருர்.

தகப்பனுரும் தாமும் அடையத் தவறிய சம்பிரதாயக் கல்வியை ஆழ்ந்த விஞ்ஞான அறிவைத் தமது மக்கள் தப்பாமல் அடைய வேண்டும் என்ற கருத்துக் கொண்டார் நாராயணன்.

இவரது ஒரு மகன் திரு சங்கரன் சிகாகோவில் எம், டெக் பட்டம் பெற்று இன்று தகப்பனுருக்குப் பலவிதங்களிலும் உதவியாக இருந்து வருகிருர். மற்றொரு மகன் திரு குமார் எலெக்ட்ரானிக் இன்ஜினீயர். அமெரிக்காவில் ஆராய்ச்சியைத் தொடர்கிருர்.

தாழையூற்றில் இன்று இந்தியா சிமெண்ட்ஸ் தொழிலகத்தை நேரில் சென்று பார்க்கும் போது, அசுர இயந்திரங்கள் 'ஆ'வென்று வாயைத் திறந்து பாறைக் கற்களைக் கற்கண்டாகப் பாவித்துக் கடபுடா என்ற பேரொலியுடன் கடித்துப் பொடி செய்வதைப் பார்க்கலாம். அப்புறம் அந்தச் சுண்ணும்புக் கல் பொடி வேறு மாற்றங்களுக்கு உள்ளாகிப் பலப் பல பொருள்களுடன் கலந்து மிருது



**சிலிர்க்கச் செய்யும் அனுபவம்**

அமெரிக்கா, டென்னஸியில் உள்ள அணுசக்தி மியூசியத்தில் ஒரு கருவி இருக்கிறது. இதைத் தொட்டால் தலை முடி முழுவதும் சிலிர்த்து நிற்கிறது. — ஸ்பான் - கே. ஆர்.

---

வான மாவு போன்ற சிமெண்டாக மாறி வெளியே வந்து சாக்குப் பைகளிலோ அல்லது கனமான காகிதப் பைகளிலோ நிரம்பித் தைக்கப்படும் வரை எல்லாம் ராட்சத இயந்திரங்களின் வேலைதான். ராட்சத வடிவினவாயினும் மனிதனுக்கு அடிமையாகித் தானியங்கு முறையில் சாதுவாகச் செயல்படும்.

'பாரதத்தின் முன்னேற்றப் பாதையில் ஒரு மைல் கல்லின் அருகே நிற்கிறோம்' என்ற பெருமையால் இதயமெல்லாம் நிறைந்திருக்கும்போது, திருநெல்வேலிக்கே உரித்தான திமர் காற்று பலமாக வீசிப் புழுதி மண்டலத்தை எழுப்பி உடம்பெல்லாம் விபூதி அபிஷேகம் பண்ணக் கண்ணிலும் வாயிலும் தூசி புகுந்தாலும் கூடப் பொருட்படுத்த மாட்டோம்! சிமெண்ட் ஆலைக்குப் பக்கத்தில் புழுதி கிளம்பக் கேட்கவா வேண்டும்?

அப்பால் இண்டஸ்ட்ரியல் கெமிகல்ஸ் நிறுவனத்தில் கால்ஷியம் கார்பைடு தயாராவதைப் பார்க்கப் போவோமானால் ஓர் எரிமலையின் உச்சியில் நிற்பதைப் போன்ற உணர்வைப் பெறுவோம். அக்கினிக் குழம்பாக வடிந்து வந்து டிராலிகளில் நிரம்புகிறது கால்ஷியம் கார்பைடு.

தாழையூற்றை விட்டுப் புறப்பட்டு மேட்டூரில் உள்ள கெமிகல்ஸ் அண்டு பிளாஸ்டிக்ஸ் தொழிலகத்துக்குச் செல்வோமானால் பாற்கடலை மேரு மலையை மத்தாகக் கொண்டு கடைந்த புராணக் கதை நினைவு வரும் அளவில் பிரும்மாண்டமான எவர்ஸில்வர் அண்டாக்களில் ரசாயனத் திரவங்கள் கடையப்படுவதைப் பார்க்கலாம்.

இந்தத் தொழிலகங்களிலெல்லாம் படிப்படியாக நடப்பனவற்றை நாமும் படிப்படியாக ரசாயன சூத்திரங்களின் உதவி கொண்டு வர்ணிக்க முடியும். ரசாயனத்தில் சிறிதளவு, அடிப்படை ஞானம் உள்ளவர்கள் அதனைப் புரிந்து கொள்ளவும் முடியும்.

ஆனால் இந்தத் தொழிலகங்களை நிறுவுவதற்குச் சங்கரலிங்க அய்யரும் மகன் நாராயணனும் கண்ட கனவுகள், போட்ட திட்டங்கள், அவை நிறைவேற எடுத்துக்கொண்ட முயற்சிகள், பட்ட அவஸ்தைகள், உறக்கமற்ற இரவுகள், உவகைதந்த நாட்கள், எதிர்பார்ப்புக்கள், ஏமாற்றங்கள், கவலைகள் கடைசியில் அடைந்த வெற்றிப் பெருமிதம் இவற்றையெல்லாம் யாரால் வர்ணிக்கமுடியும்!

திரு நாராயணன் படித்துத் தள்ளுகிற உலகப் புகழ் பெற்ற நாவலாசிரியர்கள் நாலு பேர் சேர்ந்து முயன்றாலும் போதாது.

எத்தனை எத்தனை இடையூறுகளை, பிரச்னைகளை அவர்கள் சமாளிக்க வேண்டியிருந்தது! தூத்துக்குடித் துறைமுகம் இப்போது அபிவிருத்தி அடைந்து விட்டது. ஆனால் அன்று பெயரளவில்தான் துறைமுகம். ஒரு பகுதியை இவர்களே அபிவிருத்தி செய்யவேண்டியிருந்தது. அப்படியும் பிரும்மாண்டமான ஆலைப் பாகங்களை ஏற்றி வந்த கப்பல்கள் துறைமுகத்தை நெருங்க முடியவில்லை. கரையிலிருந்து ஆறு மைல்களுக்கு அப்பால் நின்ற கப்பல்களிலிருந்து மாபெரும் தெப்பங்களில் ஆலைப் பகுதிகளை இறக்கி, பிறகு சக்திமிக்க படகுகளின் உதவியுடன் அவற்றைக் கரைக்கு இழுத்துக் கொண்டு வந்து சேர்த்தார்கள். இப்படி ஒன்றா இரண்டா எத்தனையோ சாதனைகள். இதோ மற்றொன்று:

கால்ஷியம் கார்பைடு தயாரிப்புக்கான சுண்ணாம்புக் கல்லை மலைகளிலிருந்து மட்டும் பெறாமல், தூத்துக்குடிக்கு அருகே கடல் மட்டத்துக்கு அடியிலிருந்தும் எடுக்கிறார்கள். பவழப் பாறைகள் இங்கே உள்ளன. இவை பல்வேறு கடல் வாழ் ஜந்துக்களால் உருவாக்கப்படுகிறவை. சுண்ணாம்புச் சத்து மிகுந்த இந்தப் பாறைகளைக் கடலுக்குள் மூழ்கிச் சென்று உடைத்துப் படகுகளில் ஏற்றிக் கரை சேர்த்துப் பின்னர் தாழையூற்றில் உள்ள ஆலைக்குக் கொண்டு போகிறார்கள்.

ஒரு சமயம் ஒரு திமிங்கிலச் சமூகமே கரை சேர்ந்து இறந்து விட்டது தூத்துக்குடிப் பகுதியில். கூட்டமாகக் கரை சேர்ந்து உயிரை விட்ட அவற்றைப் பார்த்துப் பலர் பரிதாபப்பட்டது இயல்பே. கூடவே 'இண்டஸ்ட்ரியல் கெமிக்கல்ஸ் நிறுவனம் கடல் மட்டத்தினடியில் பவழப் பாறைகளைப் பெயர்த்தெடுக்க வெடி மருந்தைப் பயன்படுத்துகிறது அப்போதுதான் இந்தத் திமிலங்கள் விபத்துக்குள்ளாகி உயிரை விட்டுக் கரை சேர்க்கப்பட்டுள்ளன' என்று ஒரு கதையும் கிளம்பியது. பத்திரிகைகள் அதைப் பிடித்துக்கொண்டு புகைப் படங்களுடன் பி ாதப் படுத்திவிட்டன.

இதற்கு முடிவு கட்ட ஓர் உயிரியல் நிபுணரைத் தருவித்து ஆராய்ந்து அறிக்கை விட நேர்ந்தது. அபூர்வமாய்ச் சில தருணங்களில் ஒரு திமிங்கிலச் சமூகம் கூட்டமாகக் கரை சேர்ந்து தற்கொலை செய்து கொள்வது உண்டு என்று எடுத்துரைத்தார் அறிஞர். இவை ஆலைகளின் அமைப்பிலும் அவற்றின் நடைமுறையிலும் ஏற்பட்ட சோதனைகளைச் சாதனைகளாக மாற்றிய கதைகளென்றால் ஆலைகளின் உற்பத்தியிலும் பல சாதனைகளைக் கண்டிருக்கிறார் நாராயணன்.

உதாரணமாக கால்ஷியம் கார்பைடு முதன் முதலாக இந்தியாவில் தயாரானது நாராயணனின் முயற்சியால்தான். முதல் தரமான கார்பைடு என்று முதன் முதலாக ஐ. எஸ். ஐ. நற்சான்றிதழ் பெற்றதும் இண்டஸ்டிரியல் கெமிகல்ஸ் தயாரிப்புத்தான். முதன் முதலாக கார்பைடு ஏற்றுமதியில் புகுந்ததும் இந்த நிறுவனம்தான்.

இதே போன்று இந்தியா சிமெண்ட்ஸ் சாதனைகளும் உண்டு. சில விசேஷ ரக சிமெண்டுகளை முதன் முதலாக இந்தியாவில் தயாரித்தது. தென்னிந்தியாவில் முதன் முதலாக ஐ. எஸ். ஐ. சான்றிதழ் பெற்றது. உப்புக் காற்றால் பாதிக்கப்படாத விசேஷ ரக சிமெண்டை ஏற்றுமதி செய்தது போன்றவை. தூத்துக்குடித் துறைமுகத்திலிருந்து

முதல் ஏற்றுமதி இந்தியா சிமெண்ட்ஸ் தயாரிப்புத்தான்.

இந்தியா சிமெண்ட்ஸும், கார்பைடு தொழிலகமும் ஏற்றுமதிகளைப் பெருக்குகின்றன என்றால், மேட்டூரில் உள்ள 'கெம்பிளாஸ்ட்' என வழங்கும் கெமிகல்ஸ் அண்டு பிளாஸ்டிக்ஸ், இறக்குமதியைத் தவிர்க்கிறது. இரண்டு அம்சங்களுமே இன்று தேசத்தின் பொருளாதார ஸ்திரத்தன்மைக்குப் பேருதவி புரிவன அல்லவா?

அமெரிக்காவில் உள்ள பிரபலமான குட்ரிச் நிறுவனத்தின் தொடக்க கால ஒத்துழைப்புடன் ஆரம்பமான கெமிகல்ஸ் அண்டு பிளாஸ்டிக்ஸ் தொழிலகத்தில் உருவாகும் பாலிவினைல் குளோரைடு மாவு, பலவிதமான பிளாஸ்டிக் பொருள்களை நாடெங்கிலுமுள்ள பலப்பல சிறிய பெரிய நிறுவனங்கள் தயாரிக்க மூலப் பொருளாக அமைகிறது. பிளாஸ்டிக் செருப்பு முதல் பி. வி. சி. குழாய்கள் வரை பல்வேறு பொருள்களை உற்பத்தி செய்யும் பல தொழிலகங்களுக்குத் தாய்த் தொழிலகமாகத் திகழ்கிறது. அத்துடன் இதுவே பி. வி. சி. குழாய்களையும் தயாரித்தளிக்கிறது. கெம்பிளாஸ்ட் உருவாக்கும் 'பெல்லெட்'டுகள் கிராமஃபோன் இசைத்தட்டுக்களாகக் கல்கத்தாவில் உருமாறுகின்றன.

இண்டஸ்டிரியல் கெமிகல்ஸ் தயாரிப்பான கால்ஷியம் கார்பைடு ராணுவத்தின் வெடிமருந்து தயாரிப்பு ஆலைகளுக்கு இன்றியமையாதது. இவ்விதம் தேசப் பாதுகாப்புக்கு மிக முக்கியமான பணியாற்றும் இந்த நிறுவனம் தேசத்தின் நிர்மாணப் பணியிலும் பெரும் பங்கு வகிக்கிறது. வெல்டிங் நடக்காமல் எந்தப் பெரிய தொழிலகம் உருவாக முடியும்? அந்த வெல்டிங்குக்குத் தேவையான அஸிடலின் வாயு கால்ஷியம் கார்பைடிலிருந்துதான் உருவாகிறது.

நிர்மாணப் பணியில் சிமெண்டின் இன்றியமையாத பங்கு பற்றியோ கூற வேண்டாம்.

உண்டியல் தொழிலிலிருந்து பிரிந்து சிறு தொழில் தொடங்கி அதனை மாபெரும் தொழில் சாம்ராஜ்யமாக விஸ்தரித்த சங்கரலிங்க அய்யருக்கு ஒரு சாம்ராஜ்யாதிபதிக்கு இருக்க வேண்டிய உதார குணம் குறைவின்றி இருந்தது. காந்திய பக்தரான அவர், ராஜாஜியைத் தெருவோரமாகக் காத்திருந்து வரவேற்கத் தயங்காத அவர், அவர்களுடைய அறிவுரைகளை மறப்பாரா? தாம் ஈட்டிய செல்வம் முழுமைக்கும் சொந்தம் பாராட்டாமல் பெருமளவுக்குத் தர்மாகர்த்தாப் பொறுப்பேற்று சுற்று வட்டாரமெல்லாம் பயனடையச் செய்தார். பள்ளிக்கூடம், பொறி இயல் பயிற்சிக் கூடம், மருத்துவமனை, என்று பலவும் உருவாயின.

தந்தைக்குப் பிள்ளை யென்று தப்பாமல் பிறந்த கே. எஸ். என். தகப்பனாரின் இந்தக் குணநலனை அப்படியே பெற்று விட்டிருக்கிறார். அவரிடம் உள்ள பலவீனம் பிறர் படும் சிரமத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாததுதான்! ஹிந்து பலராமன் வர்ணித்ததுபோல, ''பிறருக்கு உதவும் தன்மை என்னும் பலவீனமே நாராயணனின் மிகப் பெரிய பலம்.''

இந்தப் பலவீனம் அல்லது பலம் அபரிமிதமாகியதன் விளைவாகத் தாழையூற்றில் நடந்துள்ள சமூகப் பணிகளை அற்புதம் என்றே வர்ணிக்கலாம். தொழிலாளிகளுக்கு அரசு நிர்ணயித்த அளவில் ஊதியம் கொடுத்த முதல் சிமெண்ட் ஆலை இந்தியா சிமெண்ட்ஸ்தான். அதுவும் போதாமல் அவர்கள் சிரமப்படப் போகிறார்களே என்று நாராயணன் சில திட்டங்களை வகுத்தார். தொழிலாளர் குடும்பத்துப் பெண்கள் வெட்டிப் போது போக்காமல் அப்பளம் இடும் வேலையிலோ பீடி சுற்றும் தொழிலிலோ ஈடுபடுகிறார்கள். குடும்ப வருவாயைப் பெருக்கிக் கொள்ளுகிறார்கள். இவற்றுக்கென்று தொழில்கூடங்களும் தையல் பயிற்சி, டைப்ரைட்டிங் பயிற்சி நிலையங்களும் இயங்குகின்றன. பால் பண்ணை ஒன்று நடக்கிறது. இன்னும் தொழிலாளருக்குக் குடியிருப்புவசதிகள், கூட்டுறவுக்கடைகள், மருத்துவ மனை, கான்டீன் முதலியனவும் அவர்களின் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம், விளையாட்டுத் திடல் முதலியனவும் உண்டு.

இவ்வளவும் போதாது என்று பிரதமரின் இருபது அம்சத் திட்டத்தின் கீழ் தாழையூற்றுக் கிராமத்தையே சுவீகரித்துக் கொண்டு அக்கிராம வாசிகளுக்குப் பலவித வசதிகளைச் செய்து தருகிறது இந்தியா சிமெண்ட்ஸ். அவ்வாறே இண்டஸ்ட்ரியல் கெமிகல்ஸ் பண்டாரக்குளம் கிராமத்தைச் சுவீகரித்துக் கொண்டது.

திரு கே. எஸ். நாராயணனின் உதார குணம் அவரைச் சார்ந்திருக்கிற மனிதர்களின் நலனைக் கவனிப்பதோடு நிற்கவில்லை. தம்பி கே. எஸ். ராமனின் உதவியோடு சுற்று வட்டாரத்தில் வாழும் விலங்கினங்களின் நலனைக்கூடக் கவனிக்கிறார்! மான் இனங்களும் காட்டுப் பன்றிகளும் மயில்களும் வேறுபலவும் சுயநலமிகளால் சுட்டு வீழ்த்தப் பட்டு அடியோடு அழிந்து படா திருக்க வனவிலங்கு சரணாலயம் ஒன்றையே ஏற்படுத்தியிருக்கிறார்.

தொழிலார்வமும் செயல் நேர்த்தியும் அறிவாற்றலும் மிக்க திரு கே. எஸ். என். பழகுவதற்கும் இனியவர் என்பதை இவ்விதழ் மேலட்டையை ஒரு தரம் பார்த்தாலே போதும், புரிந்து கொள்ளலாம். நாராயணனிடம் தேசத்தின் துரிதமான முன்னேற்றத்துக்கு வழி என்ன என்றால் ஒரு முக்கோணத்தைப் போட்டுக் காட்டுகிறார். குடும்பக் கட்டுப்பாடு திட்டம் இவர்கள் சுவீகரித்துக் கொண்டுள்ள கிராமங்களில் தீவிரமாக அமலாகிறது என்றாலும் 'நாணு' என்று பலராலும் அன்புடன் அழைக்கப்படும் நாராயணன் அமைக்கும் முக்கோணம் உணர்த்துவது வேறு.

அதன் மேல் கோணத்தில் சமூக நலன் உள்ளது. அடித்தளத்தில் இருக்கும் இரு கோணங்களும் முதலீட்டாளரின் அறிவாற்றலையும் தொழிலாளர்களின் உழைப்பார்வத்தையும் சுட்டுவன.

அது ஒரு சமகோண முக்கோணம் என்பது குறிப்பிடத் தக்கது.

---



லண்டனில் டெலிபோன் தொடர்ந்து சில நாட்கள் வேலை செய்யாமல் இருந்தால் பில் தொகையில் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கழித்துப் பாக்கியைக் கட்டலாம்.

ராங் நம்பர் கிடைத்தால் போன் செய்து அந்த நம்பரைப் பில்லில் சேர்க்க வேண்டாம் என்று சொல்லலாம்.

டிட்பிட்ஸ் -- பாபு

# பார்த்திபன் கனவு

## அமரர் கல்கி

### அத்தியாயம் 11

### ரணகளம்

புரட்டாசி மாதத்துப் பௌர்ணமி இரவில் வெண்ணாற்றங்கரை மிகவும் கோரமான காட்சியை அளித்தது. வானத்தில் வெண்ணிலவைப் பொழிந்த வண்ணம் பவனி வந்து கொண்டிருந்த பூரணச் சந்திரனும், அந்தக் கொடுங் காட்சியைக் காணச் சகியாதவன்போல் அடிக்கடி வெள்ளி மேகத் திரையிட்டுத் தன்னை மறைத்துக் கொண்டான்.

பகலெல்லாம் அந்த நதிக் கரையில் நடந்த பயங்கரமான யுத்தத்தில் மடிந்தவர்களின் இரத்த வெள்ளத்துடன் கலந்தபடியால், ஆற்றில் அன்றிரவு இரத்த வெள்ளம் ஓடுவதாகவே தோன்றியது. அந்த வெள்ளத்தில் பிரதிபலித்த பூரண சந்திரனின் பிம்பமும் செக்கச் செவேலென்று இரத்த நிறமடைந்து காணப்பட்டது.

நதியின் மேற்குக் கரையில் கண்ணுக்கெட்டிய தூரம், கொடும் போர் நடந்த ரணகளத்தின் கோரமான காட்சிதான். வீர சொர்க்கம் அடைந்த ஆயிரக்கணக்கான போர் வீரர்களின் உடல்கள் அந்த ரணகளமெங்கும் சிதறிக் கிடந்தன. சில இடங்களில் அவை கும்பல் கும்பலாகக் கிடந்தன. கால் வேறு, கை வேறாகச் சிதைவுண்டு கிடந்த உடல்கள் எத்தனையோ! மனிதர்களைப் போலவே போரில் மடிந்த குதிரைகளும் ஆங்காங்கே காணப்பட்டன. வெகு தூரத்தில் குன்றுகளைப் போல் சில கறுத்த உருவங்கள் விழுந்து கிடந்தன. அவை போர் யானைகளாகத்தான் இருக்க வேண்டும்.

அந்த ரண களத்தில் விருந்துண்ண ஆசை கொண்ட நூற்றுக்கணக்கான கழுகுகளும், பருந்துகளும் நாலா பக்கங்களிலிருந்தும் பறந்து வந்து வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவற்றின் விரித்த சிறகுகளின் நிழல், பெரிதாகவும் சிறிதாகவும் ரணகளத்தின் மேல் ஆங்காங்கு விழுந்து, அதன் பயங்கரத்தை மிகுதிப்படுத்திக் கொண்டிருந்தன.

நதியின் இனிய 'மரமர' சத்தத்தைப் பருந்துகள், கழுகுகளின் கர்ண கடூரமான குரல்கள் அடிக்கடி குலைத்துக் கொண்டிருந்தன.

* * *

அந்தக் கோரமான ரண களத்தில், மெல்லிய மேகத் திரைகளினூடும் வட்டமிட்ட பருந்துகளின் நிழலினூடும் மங்கிய நிலவொளியில், ஒரு மனித உருவம் மெல்ல மெல்ல நடந்து போய்க்கொண்டிருந்தது. அது சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்துக் கொண்டே போயிற்று.

சற்று நெருங்கிப் பார்த்தால், அது ஒரு சிவனடியாரின் உருவம் என்பது தெரிய வரும்.

தலையில் சடைமுடியும், நெற்றி நிறையத் திருநீறும், அப்போதுதான் நரை தோன்றிய நீண்ட தாடியும், கழுத்தில் ருத்திராட்ச மாலையும், அரையில் காவி வஸ்திரமும், மார்பில் புலித்தோலுமாக அந்தச் சிவனடியார் விளங்கினார். அவர் கையில் கமண்டலம் இருந்தது. அவருடைய முகத்தில் அபூர்வமான தேஜஸ் திகழ்ந்தது. விசாலமான கண்களில் அறிவொளி வீசிற்று. தோற்றமோ வெகு கம்பீரமாக இருந்தது. நடையிலும் ஒரு பெருமிதம் காணப்பட்டது. இந்த மகான் சிவனடியார்தானா, அல்லது சிவபெருமானே இத்தகைய உருவம் பூண்டு வந்தாரோ என்று திகைக்கும்படியிருந்தது.

இந்தப் பயங்கர ரணகளத்தில் இந்தப் பெரியாருக்கு என்ன வேலை? யாரைத் தேடி அல்லது என்னத்தைத் தேடி இவர் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு போகிறார் ?

சிவனடியார் எந்தத் திசையை நோக்கிப் போனாரோ, அதற்கு எதிர்த் திசையில் கொஞ்ச தூரத்தில் கருங் குன்று ஒன்று நகர்ந்து வருவதுபோல் ஒரு பிரம்மாண்டமான உருவம் அசைந்து வருவது தெரிந்தது. அது சோழ மன்னர்களின் பட்டத்துப் போர் யானைதான்.

அதைக் கண்டதும் சிவனடியார் சிறிது தயங்கித் தாம் நின்ற இடத்தி லேயே நின்றார்.

நின்றது. அந்த உடல்களை ஒவ்வொன் றாக எடுத்து அப்பால் மெதுவாக வைக் கத் தொடங்கியது.

இதைக் கண்டதும் சிவனடியார் இன்னும் சற்று நெருங்கிச் சென்றார். சமீபத்தில் தனித்து நின்ற ஒரு கருவேல மரத்தின் மறைவில் நின்று யானையின் செய்கையை உற்றுப் பார்த்துக் கொண் டிருந்தார்.

யானை, அந்த உயிரற்ற உடல்களை ஒவ்வொன்றாய் எடுத்து அப்புறப்படுத் திற்று. எல்லாவற்றுக்கும் அடியில் இருந்த உடலை உற்று நோக்கிற்று: அதைத் துதிக்கையினால் மூன்று தடவை மெதுவாகத் தடவிக் கொடுத்தது.



யானையின் தேகத்தில் பல இடங் களில் காயம் பட்டு இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. நடக்க முடியாமல் அது தள்ளாடி நடந்தது என்பது நன் றாய்த் தெரிந்தது. கீழே கிடந்த போர் வீரர்களின் உயிரற்ற உடல்களை மிதிக் கக் கூடாதென்று அது ஜாக்கிரதையாக அடி யெடுத்து வைத்து நடந்தது. துதிக் கையை அப்படியும் இப்படியும் நீட்டி அங்கே கிடந்த உடல்களைத் தடவிப் பார்த்துக் கொண்டே வந்ததைப் பார்த் தால், அந்த யானை எதையோ தேடி வருவது போல் தோன்றியது.

சற்று நேரத்துக்கெல்லாம், அந்தப் பட்டத்து யானையானது, உயிரற்ற உடம்புகள் குவியலாக ஒன்றன் மேல் ஒன்றாகக் கிடந்த ஓர் இடத்துக்கு வந்து

பிறகு அங்கிருந்து நகர்ந்து, சற்றுத் தூரத்தில் வெறுமையாயிருந்த இடத் துக்குச் சென்றது; துதிக்கையை வானத்தை நோக்கி உயர்த்திற்று.

சொல்ல முடியாத சோகமும் தீனமும் உடைய ஒரு பெரிய பிரலாபக் குரல் அப்போது அந்த யானையின் தொண்டையிலிருந்து கிளம்பி, ரண களத்தைத் தாண்டி நதியின் வெள்ளத் தைத் தாண்டி, நெல் வயல்களையெல் லாம் தாண்டி, வான முகடு வரையில் சென்று, எதிரொலி செய்து மறைந்தது.

அவ்விதம் பிரலாபித்துவிட்டு அந்த யானை குன்று சாய்ந்ததுபோல் கீழே விழுந்தது. சில விநாடிக்கெல்லாம் பூகம் பத்தின்போது மலை அதிர்வது போல் அதன் பேருடல் இரண்டு தடவை

## திருப்பணிகள்

○ குரோம்பேட்டைக் கலாசாரக் கழகத்தின் ஆதரவில், மஞ்சக்குடி ஸ்ரீராஜகோபால சாஸ்திரிகளைக் கொண்டு ஏழு நாட்கள் 6-9-76 முதல் 12-9-76 வரை ஸ்ரீமத் பாகவதப் பிரவசனம் நடத்த ஏற்பாடாகியிருக்கிறது. அதனை ஒட்டி ஸ்ரீமகா சுதர்சன மகாயக்ஞமும் 12-9-76 ஞாயிறு அன்று நடைபெறுகிறது. ஹோமத்துக்கான செலவுகளுக்கு ரூபாய் 10, 5 வழங்கும் அன்பர்களுக்கு முறையே வெள்ளி ரக்ஷையும், தாமிர ரக்ஷையும் வழங்க ஏற்பாடு ஆகியிருக்கிறது. இந்த நற்பணியில் பங்கு கொள்ள விரும்புகிறவர்கள் குரோம்பேட் கல்சுரல் அகாதெமி, 93, மெயின் ரோடு, ராதா நகர், குரோம்பேட்டை, சென்னை 600 044 என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.



○ திருவேற்காட்டில் வீற்று அன்பர்களுக்கு அருள் பாலித்து வரும் அன்னை தேவி கருமாரியம்மனுக்கு அற்புதமான ஆனந்த ஞான ரதம் செய்வித்து வருகிற 12-9-76 அன்று தேர்த் திருவிழா நடத்த ஏற்பாடாகியுள்ளது. தமிழக ஆளுநர் ஸ்ரீமோகன்லால் சுகாடியா இவ்விழாவைத் தொடங்கி வைக்கிறார். அன்னை திருகருமாரியம்மனின் தேர்த் திருப்பணியோடு மற்ற திருப்பணிகளும் செவ்வனே நடைபெற வடம் பிடித்தும் பொருளுதவி வழங்க வேண்டிய முகவரி: நிர்வாக அதிகாரி, தேவி கருமாரியம்மன் கோயில் திருப்பணிக் குழு, திருவேற்காடு, சென்னை 600 077.

---

அதிர்ந்தது. அப்புறம் ஒன்றுமில்லை; எல்லையற்ற அமைதிதான்.

* * *

சிவனடியார் கருவேல மரத்தின் மறைவிலிருந்து வெளி வந்து, யானை தேடிக் கண்டுபிடித்த உடல் கிடந்த இடத்தை நோக்கி வந்தார். அதன் அருகில் வந்து சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். பார்த்திப மகாராஜாவின் உடல்தான் அது என்பதைக் கண்டார்.

உடனே அவ்விடத்தில் உட்கார்ந்து அவ்வுடலின் நெற்றியையும் மார்பையும் தொட்டுப் பார்த்தார். பிறகு, தலையை எடுத்துத் தம் மடி மீது வைத்துக்கொண்டார். கமண்டலத்திலிருந்து கொஞ்சம் ஜலம் எடுத்து முகத்தில் தெளித்தார்.

உயிரற்றுத் தோன்றிய அந்த முகத்தில் சிறிது நேரத்துக்கெல்லாம் ஜீவ களை தளிர்த்தது. மெதுவாகக் கண்கள் திறந்தன. பாதி திறந்த கண்களால் பார்த்திபன் சிவனடியாரை உற்றுப் பார்த்தான்.

"சுவாமி!... தாங்கள் யார்?" என்ற தீனமான வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வந்தன.

"அம்பலத்தாடும் பெருமானின் அடியார்க்கு அடியவன் நான், அப்பா! இன்று நடந்த யுத்தத்தில் உன்னுடைய ஆச்சரியமான வீரச் செயல்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அப்பேர்ப்பட்ட மாவீரனைத் தரிசிக்க வேண்டும் என்று வந்தேன். பார்த்திபா! உன்னுடைய மாசற்ற சுத்த வீரத்தின் புகழ் என்றென்றும் இவ்வுலகிலிருந்து மறையாது!" என்றார் அப்பெரியார்.

"யுத்தம் — என்னவாய் முடிந்தது. சுவாமி?" என்று பார்த்திபன் ஈனஸ்வரத்தில் கேட்டான். அவனுடைய ஒளி மங்கிய கண்களில் அப்போது அளவில்லாத ஆவல் காணப்பட்டது.

"அதைப் பற்றிச் சந்தேகம் உனக்கு இருக்கிறதா, பார்த்திபா? அதோ கேள், பல்லவ சைனியத்தின் ஜய கோலாகலத்தை!"

பார்த்திபன் முகம் சிணுங்கிற்று. "அதை நான் கேட்கவில்லை. சுவாமி! சோழ சைன்யத்திலே யாராவது...." என்று மேலே சொல்லத் தயங்கினான்.

"இல்லை; இல்லை. சோழ சைன்யத்தில் ஒருவன்கூடத் திரும்பிப் போகவில்லை, அப்பா! ஒருவனாவது எதிரியிடம் சரணாகதி அடையவும் இல்லை. அவ்வளவு பேரும் போர்க்களத்திலே மடிந்து வீர சொர்க்கம் அடைந்தார்கள்!" என்றார் சிவனடியார். பார்த்திபனுடைய கண்கள் மகிழ்ச்சியால் மலர்ந்தன.

"ஆகா, சோழ நாட்டுக்கு நற்காலம் பிறந்து விட்டது, சுவாமி! இவ்வளவு சந்தோஷமான செய்தியைச் சொன்னீர்களே? — உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்றான்.

"எனக்கு ஒரு கைம்மாறும் வேண்டாம். பார்த்திபா! உன்னைப் போன்ற சுத்த வீரர்களுக்குத் தொண்டு செய்வதையே தர்மமாகக் கொண்டவன் நான். உன் மனத்தில் ஏதாவது குறை இருந்தால் சொல்லு; பூர்த்தியாகாத மனோரதம் ஏதாவது இருந்தால் தெரிவி; நான் நிறைவேற்றி வைக்கிறேன்!" என்றார் சிவனடியார்.

"மெய்யாகவா? ஆகா! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். சுவாமி! உண்மைதான்; என் மனத்தில் ஒரு குறை இருக்கிறது. சோழ நாடு தன் புராதனப் பெருமையை இழந்து இப்படிப் பராதீனம் அடைந்திருக்கிறதே என்பதுதான் அந்தக் குறை. சோழ நாடு முன்னைப் போல் சுதந்திர நாடாக வேண்டும் — மகோன்னதமடைய வேண்டும், தூர தூர தேசங்களில் எல்லாம்

# எண்ணிய வண்ணம் எண்ணற்ற டிசைன

# மதுரை துணிகள் – அணிந்திடப் பெருமை

பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர் இழைகளில்
சூட்டிங்குகள் மற்றும் ஷர்ட்டிங்குகளில்
எண்ணிலடங்காத ரகங்கள்.

மதுரை துணிகள்—தயாரிப்பாளர்கள்:

## மதுரை கோட்ஸ்



டிஸ்ட்ரிபியூட்டர்கள்: மதுரா சௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (பி) லிட்., 45, மூர் தெரு, சென்னை-600 001 ■ T. M's டெக்ஸ்டைல்ஸ் 126, தெற்கு மாசி வீதி, மதுரை ■ சையத் டெக்ஸ்டைல்ஸ், 98, வடக்கு ரத வீதி, திருநெல்வேலி டவுன் - 627 006 ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், 87, கன்னாரத் தெரு, செவ்வாய்ப்பேட்டை, சேலம் ■ VVCR முருகேச முதலியார் & சன்ஸ், சிவசண்முகம் பிள்ளைத் தெரு, ஈரோடு ■ ஹாஜி P. சையத் முகம்மது, விருதுநகர்.

MCL-173 TAM

**பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள்-**

# தவறாமல் பிரஷ்கொண்டு பற்களைத் துலக்குவதோடு, ஈறுகளையும் தேய்த்துக் கொடுத்தால், ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.

**போர்ஹென்ஸ பற்பசையைத் தவறாது உபயோகிப்பவர்கள் தாங்களே கூறுகிறார்கள்.**

''...பல் உபாதையால் அவதிப்பட்டு வந்த என் மனைவி ... போர்ஹென்ஸ் உபயோகிக்கத் தொடங்கினாள்...வியக்கத் தக்க பலன் விளைந்தது...இப்போது ஈறு உபாதையால் அவதிப்படும் மற்றவர்களுக்கும் அதை அவள் சிபாரிசு செய்கிறாள். இங்கிலாந்திலுள்ள என் சகோதரரும் 6 ட்யூப் இந்திய போர்ஹென்ஸ் கேட்டு அவசரச் செய்தி அனுப்பினார்...'' (கையொப்பம்)

டி.ஜீ.எம். டிசௌஸா, பம்பாய்

''...ராஜ மகேந்திரத்திலுள்ள ஒரு பல் வைத்தியர்...பற்களும் ஈறுகளும் வலுப் பெற ... போர்ஹென்ஸ் உபயோகிக்கச் சொன்னார். உடனே அப்படியே செய்தேன். சில நாட்களிலேயே என் மூச்சுக் காற்றும் ஈறுகளும் நல்லபடியாயின. அது முதல் போர்ஹென்ஸ் என் உயிர். இப்போது என் குடும்பத்தினர் அனைவரும் (9 பேர்கள்) போர்ஹென்ஸ் உபயோகிக்கிறோம். இந்தப் பழக்கமும் நம்பிக்கையும் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். (கையொப்பம்) பி.ஜே. லாஸர்

சிராலா, ஆந்திரப் பிரதேசம்

(மேற்கண்ட சான்றிதழ்களின் புகைப்பட நகல்களை ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிமிடெடின் எந்த அலுவலகத்திலும் காணலாம்).

**முறையான பற்பராமரிப்புக்கு, போர்ஹென்ஸ் கொண்டு இரவும் காலையும் உங்கள் பற்களைத் துலக்குவதோடு, ஈறுகளையும் தேய்த்துக் கொடுங்கள்.**

***இலவசம்!*** பற்களையும் ஈறுகளையும் பராமரிப்பது பற்றிய வண்ணப் புத்தகம். தபால் செலவுக்காக, 25 பைசா தபால் தலையுடன், போர்ஹென்ஸ் டென்டல் அட்வைஸரி ப்யூரோ, டிபார்ட்மெண்ட் தெ. T133 த. பை எண் 11463, பம்பாய் 400 020 என்ற முகவரிக்கு எழுதுக. எந்த மொழியில் வேண்டுமெனத் தெரிவிக்கவும்.







# போர்ஹென்ஸ்

**பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை**

160F-152 TM



ஹைதராபாத் டெலிபோன் கோஷ்டியோடு நடந்த செமி பைனல் ஆட்டத்தில் மதுரை கோட்ஸ் குழு ராஜமாணிக்கமும் ஹைதராபாத் குழு எட்வர்டும் பந்தைப் பறிக்க முயற்சி!

# விட்டல் கோப்பை பெற்ற மதுரை கோட்ஸ்

"உங்களுக்குத் தெரியுமா? இந்த மதுரை கோட்ஸ் கால்பந்தாட்டக் கோஷ்டி முதலில் வெளியான பட்டியலில் இடம் பெறவே இல்லே!''

''இடைச் செருகலா?''

''ஆமாம்! கொச்சின் கங்க ஆட்டக்குழு இடத்துக்கு வந்து மதுரை கோட்ஸ் குழு ஆடினாங்க!''

''கடைசியிலே விட்டல் கோப்பையை அல்லவா பிடிச்சுட்டாங்க!''

மதுரை கோட்ஸ் கால்பந்தாட்டக் குழு 1973ம் வருஷம்தான் மதுரை கோட்ஸ் ஸ்பின்னிங் மானேஜர் ஜே. ஏ. சிம்மிங்டனால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. மூன்றே ஆண்டுகளில் சிறப்பாக முன்னேறிப் பட்டணத்துக்கு முதல் தடவை விஜயம் செய்யும்போதே விட்டல் கோப்பைப் பரிசு பெற்றுவிட்டது.

மதுரை கோட்ஸ் கால்பந்தாட்டக் குழுவின் காப்டன் எஸ். பி. குமார் சென்னை சர்வகலாசாலைக்காகக் கால்பந்து, ஹாக்கி, கிரிக்கெட் ஆடிப் புகழ் பெற்றவர்.

'கோச்' ராணுவப் பயிற்சியுள்ள ஜட்ஸன். கண்டிப்புக்கும் கறாருக்கும் இவர் பேர் பெற்றவர். மதுரைக் குழுவின் வெற்றிக்கு இவரது இடையறாத உழைப்பு பின்னணியில் இருக்கிறது. —குண்டுமணி

---

புலிக்கொடி பறக்க வேண்டும் என்று கனவு கண்டு வந்தேன்; என்னுடைய வாழ்க்கையில் அது கனவாகவே முடிந்தது. என்னுடைய மகன் காலத்திலாவது அது நனவாக வேண்டும் என்பதுதான் என் மனோரதம். விக்கிரமன் வீர மகனாய் வளர வேண்டும். சோழ நாட்டின் மேன்மையே அவன் வாழ்க்கையின் லட்சியமாயிருக்க வேண்டும். உயிர் பெரிதல்ல — சுகம் பெரிதல்ல — மானமும் வீரமுமே பெரியவை என்று அவனுக்குப் போதிக்க வேண்டும். அந்நியருக்குப் பணிந்து வாழும் வாழ்க்கையை அவன் வெறுக்க வேண்டும். சுவாமி! இந்த வரந்தான் தங்களிடம் கேட்கிறேன். தருவீர்களா?'' என்றான் பார்த்திபன். சக்தியற்ற அவனது உடம்பில் இவ்வளவு ஆவேசமாகப் பேசும் வலிமை அப்போது எப்படித்தான் வந்ததோ, தெரியாது. சிவனடியார் சாந்தமான குரலில், ''பார்த்திபா! உன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றுவேன் — நான் உயிரோடிருந்தால்'' என்றார்.

பார்த்திபன், ''என் பாக்கியமே, பாக்கியம்! இனி எனக்கு ஒரு மனக்குறையும் இல்லை. ஆனால், ஆனால் — தாங்கள் யார், சுவாமி! நான் அல்லும் பகலும் வழிபட்ட சிவபெருமான்தானோ? ஆகா! தங்கள் முகத்தில் அபூர்வமான தேஜஸ் ஜொலிக்கிறதே! எங்கள் குல தெய்வமான ஸ்ரீ ரங்கநாதனேதான் ஒருவேளை இந்த உருவெடுத்து....!'' என்பதற்குள், சிவனடியார், ''இல்லை, பார்த்திபா! இல்லை. அப்படியெல்லாம் தெய்வ நிந்தனை செய்யாதே!'' என்று அவனை நிறுத்தினார். பிறகு அவர், ''நானும் உன்னைப் போல் அற்ப ஆயுளை உடைய மனிதன்தான். நான் யார் என்று உனக்கு அவசியம் தெரிந்து கொள்ள வேண்டுமா? அப்படியானால், இதோ பார்!'' என்று சொல்லித் தம் தலை மீதிருந்த ஜடா முடியையும், முகத்தை மறைத்த தாடி மீசையையும் இலேசாகக் கையில் எடுத்தார்.

கண் கூசும்படியான தேஜஸுடன் விளங்கிய அவருடைய திவ்விய முகத்தைப் பார்த்திபன் கண் கொட்டாமல் பார்த்தான்.

''ஆகா! தாங்களா?'' என்ற மொழிகள் அவன் வாயிலிருந்து குழறிக் கொண்டு வந்தன.

அளவுக் கடங்காத, ஆழங்காண முடியாத ஆச்சரியத்தினால் அவனுடைய ஒளியிழந்த கண்கள் விரிந்தன.

சற்று நேரத்துக்கெல்லாம் அந்தக் கண்கள் மூடிவிட்டன; பார்த்திபனுடைய ஆன்மா இந்தப் பூத உடலாகிய சிறையிலிருந்து விடுதலையடைந்து சென்றது.

(தொடரும்)

# மலரும் பூவைப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்... இப் பருவத்தில் அவனுக்குக் கட்டாயம் தேவை இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவன் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பான்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகனின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.









# இன்க்ரிமின்* டானிக்

டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்,
ஸிரப்: 14 வயது வரையில்

## உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
## உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

Sista's INC-362 C R/76 Tam

# சிலப்பதிகாரம் ஒரு பெரிய கடல்!



## வட்டமேஜை

'அவர்கள் காத்திருக்கிறார்கள்' கதையைப் படித்தேன்.

சின்னச் சின்னக் கிராமங்களிலிருந்து பெரிய நகரங்கள் வரையில் அப்படிக் காத்திருக்கும் எவ்வளவோ ஜெயாக்களுக்கு வாழ்வுகொடுக்க எத்தனை அமெரிக்க மாப்பிள்ளைகளின் தம்பிகள் முன்வரப் போகிறார்கள்? காத்திருப்பவர்களின் நல்வாழ்வுப் பிரச்னை என்றுமே ஒரு பெரிய கேள்விக் குறிதான்.

குடந்தை
19–8–76 சுவாமிநாதன்

எந்த ஒரு முன்னேற்றமும் நம் நாட்டின் பாரம்பரியமும் பண்பாடும் ஓங்கும் வகையில் அமைய வேண்டும். பிற நாட்டினரை அப்படியே காப்பியடித்து நம் பண்பாட்டை அழித்துக் கொள்ளல் ஆகாது. அண்மையில் ''இந்தியன் ஏர்லைன்ஸ்'' நிறுவனம் வெளிநாட்டுப் பயணிகளைக் கவரும் பொருட்டு விளம்பர அட்டை ஒன்று வெளியிட்டுள்ளது. அதன் முன் பக்கத்தில் **India: She is all yours for $200** என்று அச்சிடப்பட்டு அதனடியில் பாரதக் குடும்பப் பெண்மணி ஒருவரின் படம் போடப்பட்டுள்ளது. அது வெளியிடப்பட்டுள்ள முறை இந்தியரின் பண்பாட்டுக்கு ஏற்புடையதாயில்லை. இது போன்ற இரு பொருள் தரும் வகையில் அமைந்துள்ள விளம்பரத்தை அரசு நிறுவனம் ஒன்று வெளியிட்டுள்ளது என்பது அருவருக்கத்தக்கது. அதனைத் திரும்பப் பெற்றுக் கொண்டு இனி இதுபோல் வெளியிடாமல் இருக்க வேண்டும் என்று ''இந்தியன் ஏர்லைன்ஸை''க் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை–42
21–8–76 கே. வி. ராஜன்

சரியான ஆளைப் பிடித்து விஞ்ஞானக் கதை எழுதச் சொன்னீர்கள். பாராட்டும் வாழ்த்தும். சிரிப்பு இருக்கிறது; ஆழ்ந்த ஞானம் இருக்கிறது; சிவலிங்கம் இருக்கிறது. விஞ்ஞானம் எங்கே கொண்டு போய் விடும் என்ற அறிவுரை இருக்கிறது. அசட்டுத்தனத்துக்கு ஆளாகிவிட்டால் இந்தத் தலைமுறையினருக்கு 'சென்றதினி மீளாது' என்ற எச்சரிக்கையும் இருக்கிறது.

விட்டலபுரம்
22–8–76 வேங்கடாச்சாரி

''அதிர்ஷ்டம் அழைக்கிறது'' திரைப்படத்தின் விமரிசனம் கண்டேன். நியாயமற்றதாகத் தோன்றியது.

''குதிரைப் பந்தயம்'' என்ற கொடிய தொற்றுநோய் எப்படிப்பட்டது, எப்படிப் பரவுகிறது, யார், யார் எந்தச் சூழ்நிலையில் அதற்குப் பலியாகிறார்கள் என்பதை விளக்க இதைவிட ஒரு தரமான படம் வந்ததில்லை.

திருச்சி–20
26–8–76 ஏ. அசோக் ஸ்ரீனிவாசன்

கடந்த சில வாரங்களாகக் கல்கியின் கடைசிப் பக்கத்தில், ம. பொ. சி.யின் 'சிலம்புச் செல்வம்' கண்டு மகிழ்கிறேன். அதைப் படிக்கும்போது, மீசையை அசைத்துக் கொண்டு, கண்களைக் குறும்புத்தனமாகச் சிமிட்டிக்கொண்டு ஆசிரியரே நேரில் பேசுவது போல் பிரமை தட்டுகிறது. கம்பராமாயணத்தைப் போலவே சிலப்பதிகாரமும் ஒரு பெரிய கடல். அதன் நயங்கள் இன்னும் பொதுமக்களிடம் பரவலாகப் போய்ச் சேராதது பெருங் குறை. அக்குறையைத் தாங்கள் வெளியிடும் ம. பொ. சி.யின் கட்டுரைகள் ஓரளவு போக்கும்.

திருப்பூர்
25–8–76 ச. கிருஷ்ணன்

29–8–76 தேதிய கல்கி சிரிப்புத் துணுக்கில் தன்னுடைய கார்டை ஆயிரமாவது தடவையாகப் புதுப்பிக்க வேலை தேடித் தரும் அலுவலகத்துக்கு வருகிறார் தாத்தா.

அரசு விதிமுறைப்படி முன்பு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை பதிவுக் கார்டைப் புதுப்பித்துக்கொள்ள வேண்டும். இது பின்னர் ஆறு மாதங்களுக்கொரு முறை என்றும், பிறகு ஆண்டுக்கு ஒரு முறை என்றும் மாற்றப்பட்டுள்ளது.

மூன்று மாதத்துக்கொரு முறை என்றால் கூட ஆயிரமாவது தடவை புதுப்பிக்கும்போது தாத்தாவின் வயது 250க்கு மேல் இருக்க வேண்டும்.

திருவண்ணாமலை
26–8–76 லலிதா செல்லப்பா

தாங்கள் சென்ற வாரம் காய் கனி விநாயகர் பற்றிப் பிரசுரித்துள்ளதைப் பார்த்துவிட்டுத் திருவல்லிக்கேணி சென்றபோது அங்கு இந்த வருடம் அந்த அலங்காரம் செய்யவில்லை எனக் கூறினார்கள். பெருத்த ஏமாற்றம்.

சென்னை–23
29–8–76 ஆர். கணபதி

இதுபோன்று வேறு சிலரும் ஏமாற்றம் அடைந்ததாக அறிந்து வருந்துகிறோம். — ஆசிரியர்

வார்த்தைகளால் விவரிக்க இயலாத அளவு என் மனத்தில் எண்ணங்களை எழுப்பி, கண்ணீர்க் கடலில் யாவரையும் ஆழ்த்திய அழகாபுரி அழகப்பன் அவர்களுக்கு என்ன சொல்வது என்று எங்களுக்குப் புரியவில்லை. எழுத்துப் பணியில் சிறந்து விளங்க, இறைவன் அருள் புரிவாராக!

கும்பகோணம் ஜே. பண்டரிநாதன்
10–8–76 மற்றும் குடும்பத்தினர்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

"மகா மன்னரே! நான் இன்று காலை பேசியதற்குக் காரணம் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்" என்றேன்.

"சொல்லுங்கள். நம்ப முயற்சி செய்கிறேன்" என்றார் பல்லவர்.

"நான் உங்கள் நூற்றாண்டைச் சேர்ந்தவன் இல்லை. நான் இருபத்தியோராம் நூற்றாண்டு மனிதன். என் உடைகள் விநோதமாக இருப்பதற்கு அதுதான் காரணம். நான் வைத்திருக்கும் இந்தப் பேனா இந்தச் சிகரெட் லைட்டர் இதெல்லாம் அந்த நூற்றாண்டின் சாதனங்கள்..." என்றேன்.

மன்னர் பக்கத்தில் இருப்பவரைப் பார்த்துச் சிரித்தார். அவர்கள் எல்லோரும் ஸ்விட்ச் போட்டாற்போல் ஒரே சமயத்தில் சிரித்தார்கள்.

"உண்மை!" என்றேன்.

"உங்களுக்கு வேறு உண்மை அகப்படவில்லையா?"

"மன்னரே! இவனை என்னிடம் அனுப்பி வைக்க வேண்டுகிறேன். நான்கு கசையடிகளில் உண்மை வெளிவந்து விடும்" என்றார் சற்றுத் திடகாத்திரராக ஒதுங்கியிருந்த ஒரு முண்டாசு ஆசாமி.

"தீவளர்க்கும் ஆயுதம் வைத்திருக்கிறான்" என்று எனக்குப் பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது.

"இரு" என்று சைகை காட்டி மன்னர் தம் அருகில் இருந்த ஒரு பெரியவரைக்

# கால யந்திரம்



கூப்பிட்டு அவருடன் சற்றுத்தாழ்வாகப் பேசினார். நான் கூர்ந்து கவனித்தேன். பேசிய மொழி தமிழில்லை. பிராகிருதம் போலவும் சம்ஸ்கிருதம் போலவும் இருந்தது... அந்தப் பெரியவர் தலையாட்டினார். 'தட் தட்' என்று கைதட்டினார். மன்னர் என்னை அப்புறம் கவனிக்கவில்லை. இரண்டு வலுவுள்ள புஜங்கள் என்னைப் பற்றி முனிசிபாலிடி நாயை இழுத்துச் செல்வது போல் இழுத்துச் சென்றன. 'அய்யய்யோ, ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று செய்துவிடப் போகிறார்களே' என்று திருப்பி உரத்த குரலில்....

"மன்னரே! என்னை நம்புங்கள். நான் எதிர்காலத்து ஆசாமி... எனக்கு உங்கள் சரித்திரம் முழுவதும் தெரியும். நீங்கள் இது வரை செய்தவை, இனி செய்ய இருப்பவை எல்லாம் சொல்வேன்" என்றேன்.

என் வாயைப் பொத்தி, "நடடா கூத்தனே" என்று சொல்லிச் செவிட்டில் அறைந்தான் ஒருவன்.

படி இறங்கி இருட்டான ஓர் இடத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டேன். அங்கே என் மார்புச் சட்டையைக் கழற்றச் சொன்னார்கள். உள்ளே பனியனையும் கழற்றச்சொன்னார்கள். சம்ஸ்கிருதத்தில் மன்னருடன் பேசியவர் தட்டில் பழங்களை நறுக்கிக்கொண்டு வந்து என் முன் வைத்து' அவைகளைச் சாப்பிடத் தொடங்கினார்...

சுவரோரத்தில் தீப்பந்தத்தின் வெளிச்சத்தில் முடிச்சு முடிச்சாக நான்கு சடைகளுடன் அந்தச் சாட்டை தொங்கியது.

என்ன முட்டாள் நான்! டாக்டர் செல்வரின் கண்ட்ரோல் பெட்டி! ஆம்! அதை இந்த நிகழ்ச்சிகளில் முற்றிலும் மறந்து விட்டேன். இதோ என் பாண்ட் பைக்குள்ளேயே இருக்கிறது என் விடுதலைக்கு மார்க்கம். பையிலிருந்து பெட்டியை எடுத்தேன்.

"பிடுங்கு அதை! ஏதோ ஆயுதம்!" என்று இரைந்தார் பெரியவர்.

அந்தக் காவலாளி என்னை நெருங்கி ஓடி வர அவசரம் அவசரமாக எண்களை அமைத்து மறுபடியும் கழித்தல் குறியை அமைத்து அதன் டிராவல் பட்டனைத் தட்டினேன்.

ஒரு சிறிய ஆற்றின் கரையில் நின்றேன். ஆற்றில் மணல் பாதியும் ஆழமில்லாத ஜலம் பாதியுமாக இருந்தது. அப்பாடா, கசையடியிலிருந்து தப்பித்தோம்! இது எந்த இடம், எந்த நூற்றாண்டு! பேசாமல் ரிடர்ன் பட்டனை அமுக்கியிருக்கலாம். அந்த அவசரத்தில் ஏதோ தாறுமாறாக எண்களை அமுத்தி மறுபடியும் காலத்தில் பின்னோக்கிச் சென்று வேறு எங்கோ வந்துவிட்டேன்! இப்போது 'ரிட்டர்ன்' பட்டனை அமுத்தினால் என்ன ஆகும்? திரும்ப என் நூற்றாண்டுக்குச் சென்றுவிட முடியும்! அப்படித்தான் நினைத்து ரிடர்ன் பட்டனை அமுத்தினேன்.

"போச்சுடா!" அந்தக் கசையடி அறைக்குள் கொண்டு சேர்த்து விட்டது.

"இதோ இருக்கிறான்! மாய வித்தை செய்கிறான்... பிடி!" என்று அந்த வீரர்கள் கத்திக் கொண்டு என்னை அணுக நான் வெலவெலத்துப் போய் மறுபடியும் 'ரிடர்ன்' பட்டனை அமுத்த... மீண்டும் அந்த ஆற்றங் கரைக்கே வந்து நின்றேன்!

இப்போது என்ன செய்வது? திரும்ப எப்படி என் நூற்றாண்டுக்குச் செல்வது? இது எந்தக் காலம் என்று விசாரித்துக் கூட்டல் குறியின் மூலம் தான் திரும்ப நான் என் நூற்றாண்டுக்குச் செல்ல முடியும்! சரியான வெட்டி வம்பில் மாட்டிக் கொண்டு விட்டேன்....

ஆற்றில் சலசலப்புக் கேட்டது. ஒரு பெண் நீர் மொண்டு கொண்டிருந்தாள். நான் அருகே சென்றேன். கலைந்த தலையைக் கோதி விட்டுக் கொண்டேன். ''க்கும்! பெண்ணே, எனக்கு உதவி செய்வாயா?'' என்றேன்.



# விஞ்ஞானக் கதை

## சுஜாதா

திரும்பிப் பார்த்தவள், அப்படியே குடத்தைக் கீழே போட்டு விட்டாள். குடம் குப்புறக் கவிழ்ந்து கொண்டு ஆற்றோடு போயிற்று. அதைப் பொருட்படுத்தாமல் விட்டு விட்டு ஒரே ஓட்டமாக ஓடிச் சேலைக்குள் மறைந்து சோலைக்குள் புகுந்தாள்.

நான் என்னைப் பார்த்துக் கொண்டேன். சட்டை, பனியன் இல்லாமல் வெறும் பாண்ட் போட்டுக் கொண்டு திருதண்டி சந்நியாசி மாதிரி.... நிச்சயம் பயந்திருப்பாள்.

அவள் துணி துவைக்க வந்திருக்கிறாள் போலும். கீழே சால்வை போலிருந்த ஒரு துணியை மட்டும் எடுத்து என் உடலை மூடிக் கொண்டேன்.

மெதுவாக ஆற்றுடன் நடந்தேன். ஆற்றைப் பார்த்து எந்தக்



தாத்தா: சற்று முன் உன்னைத் தேடி உன் பாய் பிரெண்ட்ஸ் வந்திருந்தார்கள்.

பாட்டி: எனக்கா ? பாய் பிரெண்ட்ஸா ?

தாத்தா: கமலாபாய், விமலாபாய், ரத்னாபாய், ராதாபாய், லீலாபாய் எல்லோரும் வந்தார்கள்.

-ரமாராம்

---

காலத்தையும் நிர்ணயிக்க முடியாது. தாமிரபரணியைப் போல் கொஞ்சம் கொஞ்சம் தோன்றியது. நீர் தெளிவாக இருந்தது. மெதுவாகச் சிரித்துக் கொண்டே ஓடியது ஆறு.

நதியோரமாக ஒரு பர்லாங் நடந்ததும் சில சிறுவர்கள் குதித்துத் துள்ளி விளையாடிக் கொண்டிருந்த துறை தெரிந்தது.

கைதட்டினேன். திரும்பிப் பார்த்தார்கள்; அதிர்ச்சியடையவில்லை.

''இந்த ஆற்றின் பெயர் என்ன?'' என்றேன். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்தார்கள். உயரம் அதிகமான ஒருவன் ''பஃறுளியாறு'' என்றான்.

எனக்கு வியப்பாக இருந்தது.

''பஃறுளியாறு?...கடல் கொண்டுவிடவில்லையா இன்னும்?'' என்றேன்.

''ஐ! யாரிவன்!'' என்றான் ஒருவன்.

''இந்த ஊரின் பெயர் என்ன?''

''மருங்குபுரம்'' என்றான், வாயைக் கொப்பளித்துத் துப்பிவிட்டு.

''என்னை உங்களுடன் அழைத்துச் செல்கிறீர்களா?'' என்று அதிக அபிநயத்துடன் கேட்டேன்.

அவர்கள் மாட்டேன் என்று தலை அசைத்தார்கள்.

என் பாண்ட் பையிலிருந்த லைட்டரை எடுத்து ''இதோ பார், ஒரு வித்தை காட்டுகிறேன்'' என்றேன்.

லைட்டரின் மூலம் அந்தச் சிறுவர்கள் எல்லோரும் சிநேகமாகி விட்டார்கள். அவர்கள் தமிழுக்கும் என் தமிழுக்கும் அதிக வித்தியாசம் இருந்தது.

'இம்பர்', 'ஐ', 'யாண்', 'பழிச்சு', 'படர்' என்றெல்லாம் வார்த்தைகள் உபயோகப்படுத்தினார்கள். சில தெரிந்த வார்த்தைகளும் தென்பட்டன. விளையாட்டு, ஆறு, நன்றி, தனிமை, பழுது, நீர்தல்.... பொதுவாக அவர்கள் பேசுவது புரிந்தது. அவர்கள் நால்வரும் ஒரு பெரியவரிடத்தில் தமிழ் பயில்கிறார்கள் என்றும் ஓலையில் ஏதோ எழுதுகிறார்கள் என்றும் தெரிந்தது. அந்த இடம் பாண்டிய நாடு என்று தெரிந்தது. தலைநகரத்தின் பெயர் கபாடபுரம் என்பதும் தெரிந்தது. அரசனின் பெயர் நிருவிற் பாண்டியன் என்று சொன்னார்கள். துணியை உலர்த்திக் கொண்டே நடந்து சென்றார்கள். இந்த விஷயங்களை அறிந்து கொள்ள ஒரு நாறு முறையாவது லைட்டரை அவர்களுக்குப் பற்றவைத்துக் காட்டியிருப்பேன்.

நிருவிற்பாண்டியன் என்றதும் என் உள் ஏதோ ஒரு மணி அடித்தது.

''நிலந்தரு திருவிற்பாண்டியன்!''

பனம் பாரனார் தொல்காப்பியத்துக்கு இயற்றிய பாயிரத்தில் வரும் பெயர்! தொல்காப்பியனார் காலம்.

''அம்பி, இங்கே வா! தொல்காப்பியனார் பற்றி ஏதாவது உனக்குத் தெரியுமா?''

ஒரு குட்டிப் பையன் ஸ்பஷ்டமாக,

'' எழுத்தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்ப ஃதென்ப
சார்ந்து வரல் மரபின்
மூன்றலங் கடையே!''

என்றான் இனிய குரலில். ''அவர் இயற்றும் நூலைத்தானே நாங்கள் நாளும் ஓலையில் எழுதுகிறோம்.''

நான் அதிர்ந்து போய் ''எங்கே உங்கள் ஆசிரியர்! அழைத்துச் செல் என்னை உடனே அங்கே!'' என்றேன்.

''எனக்கு அஃது வேண்டும்'' என்றான் லைட்டரைக் காட்டி.

''உனக்கு மட்டும் என்ன, அவன், இவன் உவன் ஆளுக்கு ஒன்று தருகிறேன் இஃது. அழைத்துச் செல் சிறுவா!'' என்றேன்.

அந்த வீட்டில் நுழைந்ததும் கோஷ்டியாகச் சிறு பிள்ளைகளின் குரல் கேட்டது. நிரம்பவும் குனிந்து உள் நுழைய வேண்டியிருந்தது. பிள்ளைகள் எல்லோரும் தரையில் உட்கார்ந்திருக்க அடர்த்தியான தாடியும் வெண்மையான உடையும் தரித்துத் தீர்க்கமான கண்களுடைய அந்தப் பெரியவர் நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார். பிள்ளைகள் எல்லோரும் எழுத்தாணிகளால் ஓலைகளில் எழுதிக் கொண்டிருந்தார்கள்...

நான் அறை வாசலில் தயங்கினேன். தொல்காப்பியனாரைச் சந்திக்கப் போகிறேன்! எப்படிப்பட்ட பாக்கியம் எனக்கு! என்ன ஒரு நல்லூழ்!

''குற்றியலிகரத்திற்கு இடனும் பற்றுக் கோடும் எவை'' என்றார்.

''குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே''

என்றான் ஒரு மாணவன்.

''நன்று'' என்றார்.

''குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள் மழலைச் சொற் கேளாதவர்'' என்றேன்.

நிமிர்ந்தார். என்னைப் பார்த்தார்.

''யாரது. மறுபடியும் சொல்லும்''என்றார்.

''குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள் மழலைச் சொற் கேளாதவர்.

''குழலினிது யாழினிது என்கிற இடத்தில் குற்றியலிகரம் பயிலுகிறது...''

''இனிய பாடல். நீர் இயற்றியதோ?'' என்றார்.

''இல்லை. திருவள்ளுவர். இனிமேல்தான் இயற்றப் போகிறார்.''

''யார் நீவிர்?''

நான் அவரை விழுந்து சேவித்தேன். ''உங்களைச் சந்தித்ததில் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? உங்கள் இலக்கண நூல் இன்னும் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் நிலைத்த புகழுடன் இருக்கப் போகிறது...''

அவர் புரியாமல் விழித்தார்.

''பெரியவரே! மாட்சிமைக்கு உரியவரே! நான் யார் என்று விளக்கினால் நீர் என்னைப்

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை

# கால்ஷியம்-ஸாண்டோஸ்®



ஸ்விட்சர்லாந்தில் ஸாண்டோஸ உருவாக்கியுள்ள,
உலகிலேயே தலைசிறந்த கால்ஷியம்

கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.
வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம்- எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்-ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும் வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




## கால்ஷியம்-ஸாண்டோஸ்®

## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

பைத்தியம் என்று சொல்லி நம்ப மாட்டீர். உங்களிடம் சற்று நேரம் உட்கார்ந்து நீங்கள் வடிக்கும் இந்த அபார நூலை நீங்கள் எழுதும் பொழுதே பாடம்கேட்ட மகத்தான பெருமை எனக்குச் சேர நீங்கள் அருள வேண்டும்!''

என் பேச்சின் பொதுவான அர்த்தத்தைப் புரிந்து கொண்டு அவர் என்னை உட்காரச் சொன்னார். தம் மாணவர்களிடம் தொடரச் சொன்னார்.

அவர்கள் எழுதியிருந்த சூத்திரங்களை வாசித்துக் கொண்டே செல்ல ஆசிரியர் அனு பவித்துத் தலையாட்டினார்.

''ஈ, தா, கொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய''

என்று படித்ததும் என்னைப் பார்த்து,

''உம் கிளவியில் ஈ, தா, கொடு போன்ற வழக்குகள் உண்டா?'' என்றார்.

''ஈ இல்லை; அழிந்து விட்டது. தா, கொடு இரண்டும் இருக்கின்றன'' என்றேன்.

''தா என்பது யார் கூற்று? கொடு என்பது யார் கூற்று?'' என்றார்.

''சாதாரணமாக எங்கள் வழக்கில் இரண் டுக்கும் அதிக வித்தியாசம் பார்ப்பதில்லை. தா என்பது சமமானவர்கள் உபயோகிப்பது என்று சொல்லலாம். கொடு என்பது சற்று உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களிடம் கேட்பது என்று சொல்லலாம்.''

தொல்காப்பியனார் ''நன்று... நன்று... புலவரே! நீர் சொன்னது அழகானதே! எழுதுங்கள்...'' என்றார்.

''தா என் கிளவி ஒப்போன் கூற்றே
கொடு என் கிளவி உயர்ந்தோர் கூற்றே''

எனக்குப் பெருமை தாங்கவில்லை. தொல் காப்பியரின் அமர நூலில் என் கைங்கரிய மும் கொஞ்சம் ஏற்பட்டு விட்டதே!..

என் அருகில் இருந்த பையன் 'இது எது' என்றான். திடுக்கிட்டேன். என் கையிலிருந்த கண்ட்ரோல் பெட்டியை அருகில் வைத் திருந்தேன். அதை எடுத்து அந்தப் பையன் விஷமம் செய்து கொண்டிருந்தான். விரல் களால் பல எண்களை அழுத்திக் கொண் டிருந்தான்.

''பழி! ஏய் ஏய், அதைத் தொடாதே, தொடாதே!'' என்று அவனிடமிருந்து பறித்த போது என் விரல் கூட்டல் குறி பட்டனை அழுத்தியிருக்க வேண்டும்.... ஓ லேட்!

''டிக்கெட் டிக்கெட் டிக்கெட்ஸ்!'' என்னைச் சுற்றிலும் ஜனங்கள். கம்பியைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு... எத்தனை கைகள்! பெண்கள், ஆண்கள், கூடைக்காரர்கள்...

பஸ் விரைந்து கொண்டிருந்தது.

''என்ன ஸார், போத்திருக்கீங்க குளு ருதா?'' அருகில் இருப்பவர்கள் என்னைப் பார்க்க, நான் அசட்டுச் சிரிப்புச் சிரித்தேன்.

''சில்லறை எடுங்க. எங்கே போறீங்க?''

''சில்லறையா?'' என்றேன்.

''அமா, ஏன் ரூபா நோட்டா இருக்கா?''

''இது எந்த ஊர்?''

இப்போது பலர் என்னைக் கவனித்தார்கள்.

''என்னய்யா, தண்ணி கேஸா? சில்ல றையை எடு!''

''அய்யா, என்னிடம் சில்லறை ஏதும் இல்லை. இந்த ஊர்க் காசு என்னிடம் இல்லை.''

''பின்னே ஏன் பஸ்ஸிலே ஏறினே? போஞ் பெரியசாமி, ஹோல்டான் அப்பா! மாமனார் வீட்டு பஸ்ஸிலே ஏறியிருக்காரு. சில்லறை இல்லையாம்.... சரியான கிராக்கி வந்தது பாரு...''

பஸ் நின்றது.

''இறங்கய்யா! உங்களையெல்லாம் மிசாலே புடிச்சு உள்ளே தள்ளணும்... இறங்கய் யான்னா!''

சந்தடி நிறைந்த இடத்தில் உதறப்பட்டு இறங்கினேன். ஹோட்டல் கேரளா என்கிற பெரிய கட்டிடம் எதிரே தெரிந்தது. குட்டி குட்டியாகக் கார்கள் நின்று கொண்டிருந்தன.

ஒரு சிறிய கடை அருகில் இளைஞர்கள் புகை பிடித்துக் கொண்டிருந்தார்கள். கடை வாயிலில் ஒருவர் மாலைப் பத்திரிகை வாங்கிக் கொண்டிருந்தார். அவரிடம் சென்று ''ஒரு நிமிஷம். அந்தப் பத்திரிகையைத் தருகிறீர் களா? ஒரே ஒரு செய்தி பார்க்க வேண்டும்'' என்றேன்.

அவர் வெறுப்புடன் என்னிடம் தந்தார்.

பத்திரிகையின் தலைப்பின் அருகில் தேதி யைப் பார்த்தேன். ஞாயிறு, ஆகஸ்ட் 21, 1976!

அப்பாடா! 1976. நான் கிளம்பியது 2024 இன்னும் 48 வருடங்கள் முன் சென்றால் போதும்! தப்பித்தேன் நல்ல வேளை!

உடனே... கண்ட்ரோல் பெட்டியை.... சுருக்கென்றது. அய்யோ!

கண்ட்ரோல் பெட்டி எங்கே? கையில் தானே வைத்திருந்தேன். பஸ்ஸில் போகும் போது பாண்ட் பைக்குள் போட்டுக் கொண் டேனே! பைக்குள் உணர்ந்தேனே...

பஸ்ஸிலிருந்து இறங்கும்போது யாரோ பிக் பாக்கெட் அடித்திருக்கிறார்கள். நான் என்ன செய்வேன்... எப்படித் திரும்பிச் செல்வேன்?

* * *

இதுவரை பொறுமையாக என் கதையைப் படிக்கக் கொண்டு வந்ததற்கு நன்றி! இந்தப் பத்திரிகையின் அலுவலகத்துக்கு நடந்து சென்று ஆசிரியரிடம் என் கதையைச் சொல்லி அவர் என் நிலைக்காக இரங்கி என் கதையைப் பிரசுரித்திருக்கிறார். அதற்காக வந்தனம். கதையைப் படித்த என் வாசக நண்பர்களே! உங்களுக்கு ஒரு வேண்டுகோள்... என் கண்ட் ரோல் பெட்டியை எங்காவது பார்த்தீர் களா? அது ஒரு சிகரெட் பெட்டியின் அள வுக்கு இருக்கும்... 0, 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 என்கிற எண்களுக்குப் பட்டன்கள் இருக்கும் ஒரு கூட்டல்குறி, ஒரு கழித்தல் குறி, ரீடர்ன், ட்ராவல் என்கிற பட்டன்களும் இருக்கும். இந்தச் சாதனத்தை நீங்கள் எங்காவது கண் டீர்களானல் அதை உடனே ஆத்மா, மேல் பார்வை இந்தப் பத்திரிகையின் விலாசத் துக்கு அனுப்புமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். பெட்டி உங்கள் யாருக்கும் உதவாது. எனக்கு மட்டும்தான் உதவும். நான் இந்த நூற்றாண்டு ஆசாமி இல்லை; அடுத்த நூற்றாண்டு ஆசாமி. தயவு செய்து அனுப்பிவிடுங்கள்....!

---

''என்னய்யா இரண்டு மாதம் முன்பு வாசக்டமி ஆபரேஷன் என்று லீவு கேட்டாய். இப்போது மறுபடியும் அதே காரணத்துக்கு லீவு கேட்கிறாயே?''

''ஹி....ஹி...! எனக்கு இரண்டு பெஞ்சாதிங்க...'' -நாநா



# "நேர்த்தியாக மணக்கும் லியூர் ஷாம்பூ நேரமெல்லாம் மணக்கும் அவர் நெஞ்சிலே"

என்கிறார் அனிதா ராபின்ஸ்—எக்ஸ்போர்ட் ஹவுஸ் நிர்வாகி.



நாலு வகையான புதிய லியூர் ஷாம்பூவிலே எதை எடுத்தாலும் அதற்குத் தனிமணம் உண்டு. சிகை எந்த வகையானாலும் சீராட்டும் அருமையிலே, ஆகா. உங்கள் துணைவர் மனம் உங்கள் கூந்தலிலே சரணம்—தலைக்கேறிய உன்னதப் புதுமணம்.

என் கேசத்திற்கு வசீகர-மூட்டுது லியூர். சுகந்தமான சுத்தமுடன் அதை சொகுசாக வைத்திருக்குது லியூர் ஷாம்பூ.



## அத்தியாயம் 43

# நீதிமன்றம்

கோர்ட்டு வாசலில் பவானியின் பளபளவென்று பாலிஷ் ஏறிய கார் வந்து நின்றது. வக்கீல் உடையிலேயே பவானி இறங்கினாள். அங்கு மிங்குமாக நின்று பேசிக் கொண்டிருந்த கட்சிக்காரர்களும் கோர்ட் சேவகர்களும் விடுவிடுவென்று காரை நோக்கி வந்து அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்களுள் ரங்கநாத முதலியாரின் கணக்குப் பிள்ளையும் ஒருவர். கைப் பெட்டியை ஒருவர், தஸ்தாவேஜுக் கட்டுகளை ஒருவர், சட்டப் புத்தகங்களை ஒருவர் என்று போட்டி போட்டுக் கொண்டு வாங்கிக் கொண்டார்கள். பவானி நடக்கத் தொடங்கியபோது கூட்டம் விலகி வழி விட்டது. ஓர் அரசி ராஜ பரிவாரங்களுடன் செல்வது போல் பவானி கம்பீரமாய் நடக்க, மற்றவர்கள் அவளைப் பின்தொடர்ந்தனர்.

''பார்த்தீராங்காணும், அம்மாவுக்கு நடக்கிற உபசாரத்தை?'' என்று தாழ்வாரத்தில் நின்ற வக்கீல்களுள் ஒருவர் கூறினார்.

''பிறந்தால் பெண்ணாய்ப் பிறக்க வேண்டும்'' என்றார் இன்னொருவர்.

''பெண்ணாய்ப் பிறந்தால் மட்டும் போதுமா? எல்லாப் பெண்களுக்கும் இப்படி குவீன் விக்டோரியா மா்திரி ராஜமரியாதை நடக்கிறதா? பிறந்தால் பவானி என்கிற பெண்ணாய்ப் பிறக்கணும் என்று சொல்லும்'' என்றார் மூன்றாமவர்.

''கட்சிக்காரர்கள் எத்தனை பேர் மிட்டாய்க் கடையில் ஈ மொய்ப்பது போல் அவளைச் சுற்றி வருகிறார்கள் பார்த்தீரா? வாதி, பிரதிவாதி இரண்டு பேருமே பவானியிடம் கேஸைக் கொடுத்து விடுவார்கள் போலிருக்கு. வயிற்றெரிச்சல்!''

இதற்குள் படியேறித் தாழ்வாரத்தை அடைந்துவிட்ட பவானி, அங்கு நின்று கொண்டிருந்த வக்கீல்களைப் பார்த்து, ''குட் மார்னிங்! எல்லாரும் ஏன் வராந்தாவிலேயே நிற்கிறீர்கள்?'' என்றாள்.

''நீங்கள் விஜயம் பண்ணுகிற வைபவத்தைப் பார்க்கத்தான் நிற்கிறோம்'' என்றார் ஒருவர்.

''நாங்கள் மட்டும்தானா? மாஜிஸ்திரேட் கூடத்தான் வந்து சேம்பர்ஸில் காத்துக் கொண்டிருக்கிறார். இன்றைக்கு முதல் கேஸ் தங்களுடையதுதான், தெரியுமல்லவா?'' என்று கேட்டார் மற்றொருவர்.

''வெரி ஸாரி, ஆனால் என்னால் ஒன்றும் தாமதமாகாது. இன்னும் ஐந்தே நிமிஷங்களில் நான் கோர்ட்டில் ஆஜராகி விடுவேன்'' என்ற பவானி விரைவாகத் தன் அறையை நோக்கி நடந்தாள்.

அவள் அப்பால் சென்றதும், ''இன்றைக்கு என்ன கல்யாணசுந்தரத்தைக் காணோம்?'' என்று சந்தேகத்தைக் கிளப்பினார் ஒரு வம்பு விரும்பி. ''வழக்கமாய்ப் பவானி வரும்போது அவளை 'ரிஸீவ்' பண்ணத் தயாராக முன்னால் வந்து நின்று கொண்டிருப்பானே?''

''மதராஸிலிருந்து 'எவாகுவீ' குடும்பம் ஒன்று வந்திருக்கிறதல்லவா? அவர்கள் வீட்டுக்குக் காய்கறி, உப்பு—புளி வாங்கிக் கொடுக்க மார்க்கெட்டுக்குப் போயிருப்பான்'' என்று ஏளனமாய்க் கூறிச் சிரித்தார் இன்னொருவர்.

''நீர் என்னங்காணும் பழங் கதை பேசிக் கொண்டிருக்கிறீர்? அவர்களுக்கும் கல்யாணத்துக்கும்தான் ஒத்துக் கொள்ளாமல் போய் விட்டதே! அவர்கள் இவன் பேரில் கேஸ் போட்டிருக்கிறார்களே. பவானிதானே அந்தக் குடும்பத்தின் சார்பில் ஆஜராகிறாள். உமக்கு ஒன்றுமே தெரியாதா?''

''ஓ, ஆமாம், ஆமாம். நான் கொஞ்ச நாட்களாய் ஊரில் இல்லை. மறந்து போச்சு.'' ''என்ன மறந்து போச்சு? வழக்கு விஷயமாகக் கேள்விப்பட்டதா? அல்லது நீர் ஊரில் இல்லை என்பதா?''

''இரண்டுமேதான்!''

''ஆமாம், ஆமாம். பவானியைப் பார்த்தால் சிலருக்கு எல்லாமே மறந்து விடுகிறது. இது பூலோகமா சொர்க்கமா என்பது கூட மறந்து விடுகிறது. நாலு நாட்கள் சிரமப்பட்டுத் தயாரித்துக் கொண்டு வந்திருந்த முக்கியமான சட்டப் பாயிண்டுகளை யெல்லாம் மறந்து விட்டுத் தடுமாறத் தொடங்குகிறார்கள்!''

''ஓய், நீர் என்ன பொதுப்படையாகப் பேசுகிறீரா? உம்ம அனுபவத்தைச் சொல்கிறீரா?'' என்ற கேள்வி பிறக்கக் குபீரென்ற சிரிப்பொலி கோர்ட் கட்டிடத்தைக் கிடு கிடுக்கச் செய்தது.

''உஷ்! கோர்ட் கூடுகிற நேரம்!'' என்று எச்சரித்தார் ஒருவர்.

''அது சரி, ரங்கநாத முதலியார் அல்லவா கோபாலகிருஷ்ணன் மீதும் அவர் மகன் மீதும் கேஸ் போட்டிருப்பதாகச் சொன்னார்கள்?'' என்று மீண்டும் ஆரம்பித்தார் மறதிப் பேர்வழி.

''நாசமாய்ப் போச்சு! திருநீர்மலையில் கல்யாணம் நின்றுபோனதில் ஆரம்பித்து இவருக்கு மறுபடியும் எல்லாவற்றையும் ஆதியோடு அந்தமாக விளக்க வேண்டும் போலிருக்கிறதே!''

''வேண்டாம் ஐயா! எதற்கு வீண் சிரமம்? அடுத்த ஐந்தாவது நிமிஷத்தில் அவர் மறுபடியும் எல்லாவற்றையும் மறந்துவிடப் போகிறார். இதற்கு விவரிப்பானேன்?''

''அகதிகள் நிவாரணத்துக்கு நாடகம் நடத்தறேன் என்று ஊரிலே இருக்கிறவன் தலையிலெல்லாம் டிக்கெட்டை வலுக் கட்டாயமாகக் கட்டறது. அப்புறம் நாடகத் தேதியன்று கல்யாணத்தை நிறுத்தத் திருநீர்மலைக்குப் போய்விடுகிறது. இது என்ன நியாயங்கறேன்?''

''அதையும் ஒரு பாயிண்ட்டாகப் பவானி சேர்த்துக் கொண்டிருக்கிறாள், சுவாமி! மோசடிக் குற்றச்சாட்டு. கல்யாணத்தை நிறுத்துவதற்காக அந்த வாலிபக் கும்பல் மேல் தாம் கேஸ் போட்டால் நன்றாயிராது என்பதால் கமலாவின் குடும்பத்தைப் போடச் சொல்லியிருக்கிறார் ரங்கநாதன். ஆனால் பவானிக்கு ஃபீஸ் அவர்தான் தருகிறார். எவ்வளவு தெரியுமா?''

''எவ்வளவு?''

''ஐந்து இலக்கம்!''

''என்ன, என்ன? எனக்கு மூர்ச்சை போட்டு விழணும் போலிருக்கு!''

''எங்களுக்காகப் பார்க்க வேண்டாம். கோர்ட் தாழ்வாரமாச்சேன்னு யோசிக்க வேண்டாம், மூர்ச்சை போட்டு விழணும்னு தாராளமாய் நீர் விழலாம்! கோலி சோடாவுக்கு நான் கோர்ட் பியூனிடம் காசு தருகிறேன்!''

இந்தச் சமயத்தில் ஹோம்ரூல் கோபால கிருஷ்ணன் கேஸ் கட்டுகளுடன் வியர்க்க விறுவிறுக்க வந்தார். அங்கே நின்றவர்களைப் பார்த்து, ''கல்யாணம் வந்து விட்டானா?'' என்றார்.

''இல்லையே?''

''அவனுக்காகக் காத்திருந்ததில் எனக்கும் 'டிலே' ஆகிவிட்டது'' என்று சொல்லிவிட்டு வேகமாய் மேலே நடந்தார் கோபால கிருஷ்ணன்.

## அத்தியாயம் 44

# வழக்கு

நீதி மன்றத்தினுள்ளே எல்லோரும் கூடினார்கள்.

''மாஜிஸ்திரேட் வருகிறார்; சைலன்ஸ்!'' என்று டபேதார் கத்தினார்.

மாஜிஸ்திரேட் கோவர்த்தனன் கம்பீரமாக வந்து ஆசனத்தில் அமர்ந்தார். பவானியைப் பார்த்துப் புன்னகை புரிந்து, ''கேஸ் எடுத்துக்கொள்ளலாமா?'' என்றார்.

''எடுத்துக் கொள்ளலாம். ஆனால் இந்தக் கேஸில் பிரதிவாதிகளுள் ஒருவரான கல்யாணத்தைக் காணோம்.''

''என்ன கல்யாணம் வரவில்லையா? கோர்ட் உத்தரவை மீறுவதா? ஆயிரம் ரூபாய் அபராதம்!'' என்றார் கோவர்த்தனன். இப்படி ஒரு சந்தர்ப்பத்துக்காகவே ஆவலுடன் காத்திருந்தவராயிற்றே!

''யுவர் ஆனர்! யுவர் ஆனர்!'' என்று அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தார் கோபாலகிருஷ்ணன். ''தாங்கள் தயவு செய்து தண்டனையை மறு பரிசீலனை செய்ய வேண்டும். அவன் எனக்கு முன்பே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டான். ஏன் தாமதம் என்று புரியவில்லை. இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவான். என் மீதும் கல்யாணத்தின் மீதும் இன்னும் பத்து இளைஞர்கள் மீதும் வழக்குத் தொடுக்கப்பட்டிருக்கிறது. எல்லோர் சார்பிலும் நான்தான் ஆஜராகிறேன்.



எனவே கல்யாணம் வருவதற்குத் தாமதமானதைப் பெரிதுபடுத்தாமல் வழக்கை நடத்தலாம். நான் தயாராக இருக்கிறேன்.''

இந்தச் சமயம் கல்யாணம் விறுவிறுவென்று நடந்து வந்து தந்தைக்கு அருகில் அமர்ந்து கொண்டான். அவன் வந்துவிட்டதைக் கவனியாதவர் போல் கோவர்த்தனன் கூறினார்: ''நீர் தயாராய் இருப்பதால் உமது மகன் செய்யும் தவறு சரியாகி விடாது. 'கன்டெம்ப்ட் ஆஃப் கோர்ட்' மிகப் பெரிய குற்றம் என்பது உமக்கா தெரியாது? சரி,

தண்டனையைக் கோர்ட் கலையும் வரை 'சஸ்பெண்ட்' பண்ணி வைத்திருக்கிறேன். அதற்குள் அவன் வந்து சேர்ந்தால் பார்க்கலாம். எதற்கும் இந்த எச்சரிக்கையைச் சொல்லும்: 'கோர்ட்உத்தரவை இடியே விழுந்தாலும் மீறக் கூடாது' வக்கீலாகப் பிராக்டிஸ் செய்ய நினைக்கும் இளைஞன் சட்டப் படிப்பின் அரிச்சுவடியையே மறப்பதா?''

''எஸ் யுவர் ஆனர்!.... அதாவது நோ யுவர் ஆனர்... அதாவது நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், உங்கள் எச்சரிக்கையைக் கல்யாணத்திடம் கூறுகிறேன். 'அரிச்சுவடியை மறக்கலாகாது' என்றும் சொல்லி வைக்கிறேன்.''

கோவர்த்தனன் புன்னகையை மறைத்துக்கொண்டு, பவானி பக்கம் திரும்பி, ''யு மே புரொஸீட்'' என்றார்.

அவரை வெறித்துப் பார்த்துக் கல்யாணம் நறநறவென்று பற்களைக் கடித்துக்கொண்டது வேறு யாருக்கும் கேட்கா விட்டாலும் அவன் காதுகளில் தெளிவாக விழுந்தது.

வழக்கில் சாட்சிகளின் விசாரணைகளெல்லாம் முடிந்த பிறகு 'ஸம்மிங் அப்பில்' ஹோம் ரூல் கோபாலகிருஷ்ணன் வாதித்தார்.

''இந்தக் கல்யாணத்தை நிறுத்திய இளைஞர்கள் பெரியதொரு சமூக சேவை செய்திருக்கிறார்கள். சின்னஞ் சிறு பெண்ணைத் தலை நரைத்த கிழவருக்குக் கல்யாணம் செய்து தருவது தருமமா? முறையா? அழகிய கிளியை வளர்த்துப் பூனையிடம் ஒப்படைப்பதா? அறியாப் பெண்ணைப் பலவந்தமாக ஒரு கிழவனுக்குக் கட்டிக் கொடுப்பதைக் காட்டிலும் அவளுடைய கழுத்தில் கல்லைக் கட்டிக் கடலில் தள்ளி விடலாம் அல்லவா? இப்படிப்பட்ட அக்கிரமத்தைத் தடுத்த இளைஞர்களுக்குச் சமூகம் நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறது. சட்டத்துக்குப் புறம்பானதாக இருந்தாலும் அது குற்றமாகாது.

''என்னையும் ஒரு







"சார்! ஒரே ஒரு பழம் நேற்றுச் சாப்பிட்டேன். இதுவரை பசிக்கவே மாட்டேன்கிறது?"
"அப்படியா? என்ன பழம்?"
"பலாப்பழம்!"
'கற்கண்டு' என்ற நாடகத்திலிருந்து தி.கை.சே

---

பிரதிவாதியாக்கி யிருந்த போதிலும் 'இளைஞர்கள் ஆற்றிய சமூகப்பணி' என்று என்னை உட்படுத்திக்கொள்ளாமலே பேசுகிறேன். காரணம், நான் இதில் நேரடியாக ஈடுபடவில்லை என்பதைச் சாட்சிகள் உங்களுக்குச் சுட்டிக் காட்டினார்கள். ஆனால் நான் பஸ்ஸைத் தவற விடாமல் அவர்களுடனேயே சென்றிருந்தாலும் இளைஞர்களைத் தடுத்திருக்க மாட்டேன். திருமணத்தை நிறுத்தத் தான் நானும் முயன்றிருப்பேன். ஒருவேளை நான் அந்த இளைஞர்களைப் போல் அமர்க்களப்படுத்தி யிருக்கமாட்டேன். மாசிலாமணியிடமும் ரங்கநாத முதலியாரிடமும் நல்லபடியாகப் பேசி அமைதியான முறையில் திருமணத்தை நிறுத்த முயன்றிருப்பேன்.

"நேற்றுவரையில் ஏன், இன்றுகூட — இந்த ஒரு கேஸில் தவிர — நான் ரங்கநாதனின் வக்கீல் என்பதைக் கனம் கோர்ட்டார் யோசித்துப் பார்க்க வேண்டும். அவருக்கு வக்கீல் என்பதை விட அவருக்கு ஆருயிர் நண்பன் என்பதில் அதிகமாக மகிழ்ச்சி அடைபவன் நான். நண்பன் தவறு செய்தால் சுட்டிக் காட்டுவது என் கடமை அல்லவா? எனவே ரங்கநாத முதலியார் செய்த ஒரு காரியத்துக்கு எதிராக இந்த வழக்கில் நான் பேச நேர்ந்ததற்கு அவர் வக்கீல் என்ற முறையில் வருத்தப்பட்டாலும் அவர் நண்பன், அவர் நலனை நாடுகிறவன் என்ற முறையில் மகிழ்கிறேன். மீண்டும் சொல்கிறேன், இந்த இளைஞர்கள் பெண் குலத்துக்கு அரிய பெரிய பணியாற்றியுள்ளனர். காலம் வேகமாக மாறி வருகிறது. பெண்களின் சம உரிமைகள் மதிக்கப்படுகின்றன. ஒரு கட்டாயக் கல்யாணத்தை நிறுத்திய தீரர்கள் போற்றுதலுக்கு உள்ளாகாமல் தண்டனை பெற்றால் பிற்போக்காளர்களாவோம். சட்டரீதியாக மட்டுமின்றி, சமூகப் பிரச்னையுடன் இந்த வழக்கை அணுகுவோம். தேசத்துக்கே வழி காட்டும் புரட்சிகரமான தீர்ப்பு இங்கே உருவாகட்டும்!"

மாறாத புன்னகையுடன் ஹோம்ரூல் கோபால கிருஷ்ணனின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பவானி இப்போது பேச எழுந்தாள்:

"எனது சகோதரர் ஹோம்ரூல் கோபால கிருஷ்ணன்... அடேயப்பா! அபாரமாகப் பேசினார். பெண்களின் சம உரிமைகளை மதிப்பதில் நான் கோபாலகிருஷ்ணனுக்குச் சிறிதும் சளைத்தவள் அல்ல. அதனால் அவர் பேச்சை நான் ரொம்பவும் ரசித்தேன். ஆனால் அவர் பேச்சில் ஆவேசம் இருந்ததே யன்றி விஷயம் ஒன்றுமில்லை. அவர் பேச்சு காங்கிரஸ் கூட்டத்தில் கதர் சட்டையணிந்து மேடை ஏறி ஆற்றவேண்டிய சொற்பொழிவு. கோர்ட்டில் பேசுகிற வார்த்தைகள் அல்ல.

"கல்யாணம் என்பது தனிப்பட்டவர்களைப் பொறுத்த விஷயம். மணமகனும் மணமகளும் சம்மதித்து மணம் புரிந்துகொண்டால் அதில் குறுக்கிட யாருக்கும் உரிமை இல்லை. இந்த வழக்கில் அறியாப் பெண்ணைப் பலவந்தம் செய்தார்கள் என்று சொல்வது முழுத் தவறு. சற்று முன் கமலா சாட்சிக் கூண்டில் சாட்சியம் சொன்னதை எல்லாரும் கேட்டோம். தன்னை யாரும் நிர்ப்பந்திக்கவில்லை என்று சொன்னாள். தானே விரும்பப்பட்டு ரங்கநாத முதலியாரை மணந்து கொள்ளச் சம்மதித்ததாகக் கூறினாள். தன்னைத் தடுக்க யாருக்கும் உரிமை இல்லை என்றாள்...."

"அவள் சொன்னது சரிதான்" என்று குறுக்கிட்டார் கோபால கிருஷ்ணன். "ஆனால் அதையெல்லாம் அவள் தானே சொன்னாளா அல்லது யாரோ சொல்லிக் கொடுத்ததைப் பயத்தில் அப்படியே ஒப்பித்தாளா என்பது தான் கேள்வி!"

"கமலாவுக்குச் சொல்லிக் கொடுப்பதற்கு என் மதிப்புக்குரிய நண்பர் கோபாலகிருஷ்ணனுக்கு ஒரு வாய்ப்புத் தருகிறேன். வேறு விதமாக அவளைப் பேசும்படி அவர் செய்து விட்டால் நான் இந்த வக்கீல் தொழிலையே விட்டு விடுகிறேன். உண்மையில் கமலாவின் தகப்பனார், திருமணம் நின்றதால் பட்ட அவமானம் போதும், கோர்ட்டுக்கு வேறு போய் ஊர் சிரிக்க வேண்டாம் என்று யோசித்தார். ஆனால் இந்தப் பெண்தான் கோர்ட்டில் வந்து சாட்சி சொல்லத் தான் தயார் என்று முன் வந்தாள். அதைக் கேட்ட பிறகுதான் இவள் பெற்றோருக்கும் சூடு பிடித்து என்னை அணுகினார்கள். கமலாவுக்கு அதிக வயதாகா விட்டாலும் அவள் பச்சைக் குழந்தையல்ல. உலக இயல்பை நன்கு அறிந்தவள். சமூக சேவா சங்கத்தைச் சேர்ந்த இளைஞர்களைப் போல் நமது நாட்டில் பிறருக்கு வாத்தியாராக இருக்க விரும்புகிறவர்கள் ஏராளமாக உண்டு. ஆனால் தங்களுக்கு என்று வரும்போது சுயநலமிகளாகி விடுகிறார்கள். இந்தத் திருமணத்தைச் சட்ட விரோதமான முறையில் ஆர்ப்பாட்டம் செய்து தடுத்து விட இவ்வளவு வாலிபர்கள் வேலைமெனக்கெட்டு பஸ் வைத்துக்கொண்டு போனார்களே —இவர்கள் நாடகத்துக்கு டிக்கெட் வாங்கிய ஆயிரக் கணக்கானவர்களை மோசடி செய்கிறோம் என்ற எண்ணம் கூட இல்லாமல் கிளம்பிச் சென்றார்களே — கிழவனுக்கும் குமரிக்கும் திருமணமா என்று சீறுகிறார்களே இவர்களில் யாராவது ஒருவர் இந்த ஏழைப் பெண்ணை மணப்பதற்கு முன்வருவாரா? மாட்டார்! அப்போது பணம், பதவி, சொத்து, அந்தஸ்து, ஜாதி எல்லாம் குறுக்கிட்டு விடும்!...."

கல்யாண சுந்தரம் எழுந்து நிற்க முயன்றான். ஹோம்ரூல் கோபால கிருஷ்ணன், அவன் சட்டையைப் பிடித்து இழுத்து உட்கார வைத்தார்.

பவானி, "மிஸ்டர் கல்யாண சுந்தரம் ஏதோ கூற ஆசைப்படுகிறார் போலிருக்கிறதே!" என்றாள். (தொடரும்)

# வேறு எந்த ஆரோக்கிய பானமும் பரிபூரணமானது அல்ல.





**சாப்பிட நேரமில்லையா?**
உணவுக்குப் பதிலாக
உடனடியாக
உதவுவது காம்ப்ளான்.
ஓய்வின்றி உழைக்கும்
அதிகாரிகள்,
பிரயாணிகள், அலுவலகம்
செல்வோர் ஆகியோருக்கு
ஏற்றது காம்ப்ளான்.

**சாதாரண ஆரோக்கிய நிலையில்**
ஆரோக்கியமாகவும்
துடிப்புடனும்
விளங்கவும் நீங்கள் உணராத
போஷாக்குப் பற்றாக்குறையைப்
பூர்த்தி செய்யவும் தினசரி
காம்ப்ளான் பருகுங்கள்.

**துடிப்புடனும்
சக்தியுடனும் விளங்க
உங்களுக்குத் தேவையான
இந்த 23 அத்தியாவசிய ஊட்டச்
சத்துக்கள் நிறைந்த
பரிபூரண பானம்**

# காம்ப்ளான்®

**ஒன்றுதான்.**

புரதம்
கார்போஹைடிரேட்
கால்ஷியம்
லிப்பிடுகள்
பாஸ்பரஸ்
சோடியம்
குளோரைடு
(cl வடிவில்)
பொட்டாஷியம்
இரும்பு
சத்து
அயோடின்
வைட்டமின் 'ஏ'
வைட்டமின் பி1
ரிபோஃப்ளேவின்



நிகோடினமைடு
கால்ஷியம்
கோலின்
பென்டோதெனேட்
பைரிடாக்ஸின் (பி6)
வைட்டமின் பி12
ஃபாலிக் அமிலம்
வைட்டமின் ஸி
வைட்டமின் டி
வைட்டமின் ஈ
வைட்டமின் கே
அதோடு, இதர சிறுசிறு
பொருட்கள், உடல்
சரிவர ஆரோக்கியமாக
இயங்க உதவும்.

**பாலையும் விட இன்னும் அதிகமான
வைட்டமின்கள், புரதம்,
கால்ஷியம், இரும்புச் சத்து
மற்றும் இதர அத்தியாவசிய ஊட்டச்
சத்துக்களை காம்ப்ளான் அளிக்கிறது.**

*பரிபூரண, போஷாக்கிற்கு
டாக்டர்களால் பெரிதும்
சிபாரிசு செய்யப்படுவது

**சரியாக
சாப்பிடுவதில்லையா?**
காம்ப்ளான் தரும்
23 அத்தியாவசிய
'ஊட்டச் சத்துக்களின்'
'பரிபூரண' போஷாக்கை
வேறு எந்த ஆரோக்கிய
பானமும் தருவதில்லை. எனவே
அவரது போஷாக்கில் எந்த
பற்றாக்குறை இருந்தாலும், அதை
ஈடுசெய்து, அவரை
ஆரோக்கியமுடன் விளங்கச்
செய்கிறது காம்ப்ளான்.

**நோயால் சக்தி
இழந்துவிட்டீர்களா?**
'பரிபூரண' போஷாக்கிற்காக,
டாக்டர்களால் பெரும்பாலும்
சிபாரிசு செய்யப்படும்
காம்ப்ளான் பருகி விரைவில்
இழந்த சக்தியைப் பெறுவீர்.








**காம்ப்ளான்®**
ஒரே பரிபூரண
ஆரோக்கிய பானம்.

உலகெங்கும்
உபயோகிக்கப்
படுவது.

**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில்
உருவானது.

CMGC.17-203 TM

# சங்கீதத்தில் புலி; சுபாவத்தில் பசு!

எம்.டி. ராமநாதன்



"ஆறாவது பிள்ளை ஆனை கட்டி வாழ்வான்" என்பது பழமொழி. நூறு வருஷங்களுக்கு முன்பாகச் சென்னைக்கு அருகிலுள்ள காலாடிப்பேட்டையில் ஓர் உத்தமமான ஸ்ரீவைஷ்ணவ தம்பதியருக்கு ஆறாவதாக ஒரு குழந்தை பிறந்தது. இக்குழந்தையானது பிற்காலத்தில் "டைகர் வரதாச்சாரியார்" என்று புகழ் பெற்று இசையுலகில் ஒரு "கஜகேசரி"யாக விளங்கியது.

இவ்வருடம் இந்தச் சங்கீத மாமேதையின் பிறந்த நாள் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடப்போகிறோமென்று நினைக்கும்போதே எனது உள்ளம் உவகையில் பொங்கி வழிகிறது.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் சிஷ்ய பரம்பரையில் பட்டிணம் சுப்பிரமணியர் அவர்களுக்கு ஒரு சிறந்த ஸ்தானம் உண்டு. இம்மகா வித்வானின் சிறந்து விளங்கிய சிஷ்யர்களுள் ஸ்ரீ வரதாச்சாரியாரும் ஒருவர். மேலும் பூச்சி ஸ்ரீநிவாச அய்யங்கார், மைசூர் வாசுதேவாச்சாரியார், வரதாச்சாரியார் ஆகிய மூவரும் இந்த சிஷ்ய பரம்பரையில் சங்கீத மும்மணிகளாக விளங்கினார்கள். இவருடைய சகோதரர்களான வீணை கிருஷ்ணமாச்சாரியாரும், கே. வி. ஸ்ரீநிவாச அய்யங்காரும் நமது 'சங்கீதத்துக்குச் செய்துள்ள தொண்டுகள் மறக்க இயலாதவை.

சென்ற நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் கேரளத்தில் கோழிக்கோட்டில் அரசாங்க உத்தியோகமொன்றில் அமர்ந்தார். சிறிது காலத்துக்குப் பின் சங்கீதத்திலுள்ள மிகுதியான ஆர்வத்தினால் உந்தப்பட்டு, அவ்வரசாங்க வேலையை உதறி எறிந்து சங்கீத சேவையில் ஈடுபட்டார். இந்நோக்கத்துடன் திருச்சூர், மைசூர், பெங்களூர் முதலிய பல இடங்களுக்குச் சென்று தங்கியிருந்தபோது கலாபிமானிகளால் பெரிதும் போற்றப்பட்டார். இந்நாட்களில்தான் இவருடைய அபார வித்வத்தின் மகிமையால் 'டைகர்' என்ற அபூர்வ விருது இவரை நாடி வந்தது.

மைசூர் இராஜவம்சம் இவருக்கு அளித்துள்ள வெகுமதிகள் பல. ஸ்ரீ ஜயசாமராஜ உடையார் இவருக்கு 'சங்கீத சாஸ்திர விசாரதா' என்ற பட்டம் அளித்து ஆஸ்தான வித்வானாக அமர்த்தி மரியாதை செய்து வந்தார். இவைகளுக்கெல்லாம் முன்பாகவே சென்னை சங்கீத வித்வத் சபை 'சங்கீத கலாநிதி' விருதை அதன் ஆரம்ப மகாநாடுகளிலேயே அளித்தது.

சென்னை மியூஸிக் அகாடமி, சென்னை பல்கலைக் கழகம், அண்ணாமலை பல்கலைக் கழகம், கலாக்ஷேத்திரா போன்ற ஸ்தாபனங்களில் சிறந்த சங்கீத ஆசிரியராக இருந்து கர்நாடக சங்கீதத்துக்குச் செய்த சேவைகள் எண்ணிறந்தவை. குறிப்பாக அண்ணாமலை இசைக் கல்லூரியில் தமிழிசையைப் பேணி வளர்த்தது போற்றத் தக்கதாகும். மேற்கூறிய விசேஷ சங்கீத போதனா காலங்களில் டைகர் அவர்கள் நூற்றுக் கணக்கான சங்கீத பூஷணங்களையும் டிப்ளொமா பெற்றவர்களையும் சங்கீத சிரோமணிகளையும் உருவாக்கினார். இவர்களில் ஒருசிலர் பிற்காலத்தில் பிரசித்தமான வித்துவான்களானார்கள்.

கலாக்ஷேத்திரத்தில் இவருடைய வாழ்நாளின் அந்திம காலங்கள் ஸ்ரீமதி ருக்மிணி தேவியாரின் அன்பிலும், ஆதரவிலும் அமைதியாகக் கழிந்தன. கலாக்ஷேத்திரத்தின் சூழ்நிலையில் இவரது கற்பனா சக்தி தீவிரம் அடைந்தது. அதன் பயனாக அற்புதமான வர்ணங்களையும் வர்ண மெட்டுக்களையும் இயற்றி யாவரையும் பிரமிக்கச் செய்தார்.

கலாக்ஷேத்திரத்தில் இவர் சேவை செய்ய வந்த நாட்களில் ஆரம்பத்திலிருந்து அவரிடம் மாணாக்கனாக அமரும் பெரும் பாக்கியம் எனக்குக் கடவுள் கிருபையால் கிட்டியது. அவ்வாறு நெருங்கிப் பழகிய ஐந்தாறு வருடங்கள் எனது சங்கீதக் கலை தபஸுக்கு அஸ்திவாரமாகவும், அநுக்கிரகமாகவும் அமைந்தன. அத்துடன் இவருடைய இறுதி நேரத்தில் அருகிலேயே இருந்து இவர் அவ்வப்பொழுது விரும்பிப் பாடச் சொன்ன தியாகராஜ ஸ்வாமிகளின் கிருதியை (எந்த ராணி — ஹரிகாம்போஜி)ப் பாடிப் பூரண ஆசீர்வாதத்தைப் பெற்ற பாக்கியனானேன்.

ராஜாஜி அவர்கள் கலாக்ஷேத்திரத்தில் ஒரு சந்தர்ப்பத்தில் பேசும்பொழுது "டைகர் ஒரு மாமேதை. அவர் பாடுவதிலும் புலி; பேச்சிலும் புலி; எல்லாவற்றிலும் புலி" என்று கூறினார். ஆயினும் பிறருடன் இனிமையாகப் பழகுவதில் ஒரு பசுவாகவே காணப்பட்டார்.

நவநீத இதயம், சரள சுபாவம், பரந்த மனம், நகைச்சுவையூட்டும் ஆழ்ந்த கருத்துள்ள சம்பாஷணைகள், கலை ரஸனை, அச்சமின்மை இத்தியாதிகள் சேர்ந்தது டைகர் சுவரூபம் எனலாம். இந்த வித்துவான்களுக்கு வித்துவானின் நூற்றாண்டு விழாப் பந்தலுக்குப் பந்தக்காலாக இக்கட்டுரை அமையட்டும்!

மேக் அப் உங்கள் முகத்தின்
குறைகளை மறைக்கலாம்.





# உங்கள் மேனியை தூய்மையாக்கி இயற்கை எழிலுடன் துலங்கச் செய்வது லாக்டோ-காலமைன் ஒன்றுதான்.

உங்கள் மேனியைப் பராமரிக்க லாக்டோ-காலமைன். உங்கள் மேனியைத் தூய்மையாகவும் புதுமையாகவும் வைத்திருக்கக் கூடிய சேர்க்கைப் பொருட்கள் விசேஷ முறையில் இதில் கலக்கப் பட்டுள்ளன. எல்லாம் ஒன்றில் இணைந்த அழகுப் பராமரிப்பு—லாக்டோ காலமைன் அஸ்ட்ரின்ஜெண்ட், மாயிஸ்சரைஸர், ஃபவுண்டேஷன் க்ரீம். மூன்றும் இணைந்த தன்னிகரற்ற அழகு சாதனம்.

அதனை முறையாக உபயோகித்து வரவும். உங்கள் மேனி இயற்கையாக மெருகேறுவதைக் கண்கூடாகக் காண்பீர்கள்.




3 வசதியான சைஸ்களில் கிடைக்கிறது:
110 மி.லி.
60 மி.லி. 28 மி.லி.

க்ருக்ஸ் லாக்டோ-காலமைன், ஒரு ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க். இதனைத் தவறாகப் பயன்படுத்துபவர்கள் சட்டப்படி தண்டிக்கப் படுவார்கள்.



உண்மையான லாக்டோ-காலமைன் தானா என்று உறுதி செய்து கொள்வதற்கு, எப்போதும் இந்த க்ருக்ஸ் சின்னத்தைப் பார்த்து வாங்குவீர், அதோடு, க்ருக்ஸ் முத்திரையும் உடையாமல் இருக்கிறதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள்.

டுஃபார்-இன்டர்ஃப்ரான் லிமிடெட்
த.பெ. எண் 6582, பம்பாய்-400 018

க்ருக்ஸ்

# லாக்டோ-காலமைன் அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

Sista's-DIL-219-Pi/76/Tam



போட்டிக் கதை:2

# துப்புக் கூலி

மாட்டுத் தொழுவில் உள்ள முற்றத்தில் மடக்குக் கட்டிலைத் தூக்கிப் போட்டுக் கிழக்கு முகமாய்த் திரும்பி உட்கார்ந்திருந்தார் ரண வீரசாமி.

எப்போதும் அவர் கையோடு கையாக இணைந்தே இருக்கும் தடிக் கம்பு மேலச் சுவரில் சாத்தப்பட்டிருந்தது.

நாளைக்குத்தான் பௌர்ணமி போலும். பால் நிலவு பட்டப் பகல் போல் அடித்துக் கொண்டிருந்தது. தற்செயலாக மேலே அண்ணாந்து பார்த்தார். இரவு நேரத்தில் இவ்வுலகை இறைவன் பார்ப்பதற்காக அடிக்கப்படும் 'பாட்டரி லைட்'டுப் போல் அவரது கற்பனையில் பட்டது அந்நிலவு.

தொழுவத் தாழ்வாரத்தில், கடந்த வாரம் சாவணியிலிருந்து வாங்கி வந்திருந்த இரண்டு மயிலைக் காளைகள் அழகாகக் கூளங் கடித்துக் கொண்டிருந்தன. வேல்க் கத்தி போன்ற கூர்மையான கொம்புகள். பருத்த திமில். செழித்த பிட்டாணி. பார்க்கப் பார்க்கக் கையெடுத்துக் கும்பிட வேண்டும் போல் தோன்றியது அவருக்கு. ராமர், லட்சுமணர் மாதிரி நல்ல ஜோடிப் பொருத்தம்.

தொழுவத்தின் தெற்கோரத்தில் கொஞ்ச நாட்களாகக் கைதியாக்கப்பட்டுக் கிடக்கும் வெள்ளாட்டங்கிடாய், ''மே...'' என்று தொண்டை தெறித்தாற்போலக் கத்தியது. அந்தப் பக்கம் கவனத்தைத் திருப்பினார் அவர். அந்தக் கிடாயும், அதன் கோரமான குரலும், அவர் இதயத்தைக் கிளறி, மறைந்து கிடந்த ஒரு சம்பவச் சரக்கை வெளிக் கொணர்ந்து காட்டியது.

மூன்று மாதங்களுக்கு முன்பு —

அன்று, தும்பை மலர் போன்ற வேட்டி உடுத்தி, அந்தப் பச்சை நிறத் துண்டையும் தலையிலே பாதர் வெள்ளை மாதிரி வரிந்து கட்டி, இடுப்பிலே சூரிக் கத்தியையும் செருகி, நெற்றி நிறையத் திருநீறு அணிந்து, கனத்த செருப்பையும் காலிலே மாட்டி, தம் நெற்றிக்குச் சரியான அந்தக் கறுப்பு நிறத் தடியையும்

**கையிலே பிடித்துப் போர்க் கோலம் பூண்ட ஒரு மன்னன் போல், ராத்திரி நேரம் கிடை காவலுக்காக ஆட்டுக்கிடையில் நிலைகொண்டிருந்தார் ரணவீரசாமி.**




அ. முத்தானந்தம்

நேரம் நடுச் சாமம் இருக்கும். களவுக்குத் துணைவனை நல்ல இருட்டு. அந்த இருளைத் துணையாகக் கொண்டு, இரண்டு பேர்கள் கிடைக்குள்ளே நுழைந்து விட்டார்கள். ஆடுகள் கலைந்தன. ஆடுகளோடு ஆடுகளாகப் பதுங்கிக் கொண்ட அவர்கள் குறித்த ஆடுகளாகப் பார்த்துச் சங்கை ஒதுக்கிக் கிடைக்கு வெளியே பத்தினார்கள். அந்நேரம் பார்த்து நாய் குரைத்தது. உஷாராகிக் கொண்ட ரணவீரசாமி, கையிலுள்ள, 'பாட்டரி லைட்'டை அடித்துப் பார்த்து, ''யாரடா, அங்கே?'' என்று கர்ஜித்தார். அவ்வளவு தான், உயிரைக் கையில் ஏந்திக் கொண்டு ஓட்டம் பிடித்தார்கள் வந்தவர்கள். இருந்தாலும் ரணவீரசாமியின் வீரம் அவர்களைச் சும்மா விடவில்லை. துரத்திப் பிடித்து, அடித்து நொறுக்கி, ''நானும் கம்பு பிடித்து இவ்வளவு காலம் ஆகுது... என் காவலுக்குள்ளே ஓர் ஈ, எறும்புகூட நுழைஞ்சது கிடையாது... உங்களுக்கு ஈரலிலே பித்தா ?... எலும்பிலே பித்தா ?'' என்று கேட்டுக் கொண்டே புறங் கையைச் சேர்த்து இருவரையும், பிணைத்துக் கட்டி ஊரை நோக்கி இழுத்துக் கொண்டு வந்தார்.

'நாலு பேருக்கு முன்னால் போய் நின்றால் என்னென்ன வெகுமதிகள் கிடைக்குமோ?' என்று அவர்களுக்குப் பயம். எனவே, அவர்கள் ரணவீரசாமியின் காலிலே விழுந்து, ''ஐயா, எங்களை இத்துடன் விட்டுடுங்க.... மன்னிச்சுடுங்க. நாங்க பிறந்தான் பிறப்புக்கு இந்தப் பக்கம் தலை வைச்சுக்கூடப் படுக்க மாட்டோம்ய்யா....'' என்று மன்றாடிக் கேட்டார்கள்.

கோபத்தின் மறு நுனிதானே குணம் ? அவர்களுக்கு அந்த இடத்திலேயே விடுதலையும் கிடைத்தது.

அவர்கள் கடத்திச் செல்லவிருந்த ஆடுகளில் ஒன்றுதான் அந்தக் கிடாய். வருகிற ஆவணி மாதம் 'அம்மன் கொடைக்'காக வீட்டிலே கட்டிப் போட்டுச் செல்லப் பிள்ளையாக வளர்க்கிறார்கள் அதை.'

ரணவீரசாமி மாதத்தில் ஓரிரு நாட்கள் மட்டுமே இரவில் வீட்டில் தங்குவார். மற்ற நாட்களிலெல்லாம் அவர் ராஜாங்கம் நடப்பது கிடையிலேதான்.

ரணவீரசாமியின் தொழுவவேலை, விவசாய வேலைகள் அனைத்தையும் இழுத்துப் போட்டு ஒரு சேரப் பார்ப்பது அவர் மைத்துனர்—மஞ்சையா.

மஞ்சையா, நல்ல நாடக ரசிகர். அன்றைக்குத் தேதிக்குப் பக்கத்து ஊரில் நடக்கும் 'அரிச்சந்திர மயான காண்டம்' நாடகம் பார்க்க அவர் போக வேண்டியிருந்ததாலேயே ரணவீரசாமி மாட்டுத் தொழுவத்திலே படுக்க வேண்டியதாயிற்று.

தொழுவத்துக்குள் வந்து ஞாபகமாக உள்ளே கூடித் தாழ்ப்பாள் போட்டுவிட்டு, இரண்டு தளுக்குக் கூளம் அள்ளி மாட்டுக் காடியில் போட்டார்.

கட்டிலில் வந்து சாயும்போது வெளியே நாய் ஒன்று குரைக்கும் சத்தம் கேட்டது. ஆனால் அதை அவர் லட்சியம் செய்யவில்லை.

தொழுவ வேலை பார்ப்பதற்காக நாடகத்தின் கடைசிப் பகுதியைச்சரியாகக்கூடப் பார்க்காமல், வந்துவிட்டார் மஞ்சையா. தலைக் கோழி கூவிச் சிறிது நேரம் இருக்கும் அப்போது. தொழுவக் கதவு இலேசாகத் திறந்திருந்தது. உள்ளே போனார். முதற் பார்வையே கட்டுத் துறையில்தான் விழுந்தது. மாடுகளை அங்கு காணவில்லை. இதயத்தில் வந்து இரும்பு கொண்டு மோதியது போல் மனம் பகீரென்றது.

ரணவீரசாமி குறட்டை போட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

'ஒரு வேளை மாடுகளை வெளியே கொண்டு கட்டிவிட்டு வந்து படுத்திருப்பாரோ....?' என்று எண்ணிய மஞ்சையா, வழக்கமாகக் கட்டும் இடங்களிலெல்லாம் போய்ப் பார்த்தார். மாட்டுத் தடமே அங்கு இல்லை.

இன்னும் ரணவீரசாமி நித்திராதேவியின் அரவணைப்பிலின்றும் விடுபடவில்லை.

நிலைகொள்ள முடியாமல் தவித்த மஞ்சையா, ரணவீரசாமியின் தலைமாட்டில் நின்று, ''மச்சான்...! மச்சான்...!'' என்று உரக்கக் கூவி எழுப்பி, விசயத்தைச் சொல்லிக் கேட்டார்.

அவருக்கும் அது ஆச்சரியமாக இருக்க, ''நான் கதவை நல்லாப் பூட்டிவிட்டுத்தானே வந்து படுத்தேன்...? என் தலைமாட்டுலே கட்டிக் கிடந்த மாடுகளைக் களவாடிட்டுப் போகிறதுக்கு எவனுக்கு வயக காணும் ?...'' ஆத்திரத்தோடு கொக்கரித்தார் ரணவீர சாமி.

நேரம் நன்றாக விடியவில்லை. இயக்கிவிட்ட யந்திரம் போல் கிராமம் இயங்கிக் கொண்டிருந்தது. — சாணி, சகதிகளை அள்ளிக் குப்பைக் குழியிலே கொண்டு போடுபவர்கள்; ஆடு, மாடுகளுக்குத் தண்ணீர் எடுப்பவர்கள், படப்புக்குச் சென்று கூளம் முறித்து வருபவர்கள்; ஊர்ப் பொது ஆட்டுரலில் வரிசையாக நின்று பருத்தி விதை ஆட்டுபவர்கள்— என்று இப்படி.

எனவே ராத்திரி நடந்த சங்கதி, தலைகீழாகப் பிடித்த மெல்லிய காகிதத்தின் அடிப் பகுதியில் பற்றிக் கொண்ட தீப்போல் வெகு சீக்கிரத்தில் ஊரெங்கும் பரவியது.

தொழுவத்துக்கு முன்னால் பெரிய கூட்டம். பலரும் பலவிதமாக அது பற்றிப் பிரஸ்தாபித்தார்கள்.

''உள்ளே பூட்டிக் கிடந்த கதவைத் திறந்து மாடுகளை எப்படியய்யா கொண்டு போக முடியும்? திருடிக்கிட்டுப் போனவங்க பெரிய எம்டங்கதான் !'' — ''என்னய்யா, ரணவீர சாமி வீட்டுலே மாடுக களவு போருதுன்னு... எங்க மாடுகளெல்லாம் எம்மாத்திரம் ? ராத்திரிப் பகலா படப்புலேதான் கெடக்குது. எங்க சின்னையா வீட்டு மாடுக, ஆடையும் கோடையும் பிள்ளையார் கோவிலுக்கு முன்னாலேதான் கெடக்குது.''

''அட, நீங்க ஒண்ணு. இது வேணும்னு செய்த வேலையா !''

'' சரி, எப்படியும் இருந்துட்டுப் போகுது. இது ரணவீரசாமிக்கு மட்டும் அல்ல, — ஊருக்கே ஏற்பட்ட அவமானமாகத்தான் கருதணும். என்ன பாடு பட்டாச்சும் மாட்டைக் கொண்டுகிட்டு வந்திடணும்; இல்லாட்டா பெரிய மானக் கேடு.'' —

ஒவ்வொருவருடைய சொற்களும் வெவ்வேறு ஆயுதங்களாக நின்று, ரணவீரசாமியின் மனத்தைக் குத்திக் கிழித்துக் குதறின.

சூரியனின் கோபம் கொஞ்சம் கொஞ்சமாக முறுக்கேறிக் கொண்டு வர, நேரம் இளமதியானது. ஊர்க் கூட்டத்தின் முடிவுப் படி, ரணவீரசாமி, மஞ்சையா, தடம் பார்க்கும் தலையாரி இவர்களோடு வீட்டுக்கொருவராக ஊரோடு கம்பு, தடிகளுடன் தடம் பார்த்துச் சென்றார்கள். நர வேட்டைக்குப் போகிறவர்கள் போல் இருந்தது, அவர்களின் போக்கு.

முதலில் ராமேசுவரம் இருக்கும் திசையை நோக்கி, அந்த ராமநாதனை மனத்தில் நினைத்துக் கும்பிடு போட்டுக் கொண்டே தொழிலைத் தொடங்கினார் தலையாரி.

காலைகளை ஓட்டிக் கொண்டு, கரிசல் காட்டுப் பெரும் பாதை வழியாகப் போகாமல், ஊடு காட்டு வழியாக விரைந்திருக்கிறார்கள், திருடர்கள். வந்தவர்கள் இருவர் போலும். தடங்கள் அப்படித்தான் காட்டின.

மலை வாயில் பொழுது விழுவதற்குள் தடங்கள் சங்கமமாகியிருந்த அந்தக் கிராமத்துக்குள் நுழைந்துவிட்டார்கள் அவர்கள்.

அது ஓர் அழகான கிராமம். மேற்புறம் பெரிய கண்மாய். கண்மாய்க் கரையெங்கும் குளுகுளு வேப்ப மரங்கள். நீர்த் துறையை அடுத்துப் பெரிய ஆலவிருட்சம். தவமுனிகளின் சடாமுடிகள் போல் ஆல விழுதுகள்....

ஊருக்குள் சென்றதும் முதன் முதலில் யாரைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று தலையாரி எண்ணிக் கொண்டு வந்தாரோ, அந்தப் புள்ளியே, கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது மாதிரி முன்னடியில் உள்ள கிராமப் பொது மடத்தில் உட்கார்ந்திருந்தது. அவர்தான் 'துப்புக் கூலிச் சுந்தரலிங்கம்'. தலை, தாடி, மீசை எல்லாமே செம்மண்ணில் துவட்டிய பஞ்சுப் பொதி மாதிரி இருந்தன. பார்ப்போருக்கு ஆண் சிங்கம் போலத் தோன்றும் அவரே ஊருக்குப் பெரிய மனிதர் — நியாயஸ்தர். மன்னன் சொல்லுக்கு மறு சொல் கிடையாது அங்கே.

அவரோடு இருந்த இளவட்டப் பையன் மடத்து விளக்கை எடுத்துத் துடைத்துக் கொண்டே அவரோடு உரையாடிக் கொண்டிருந்தான்.

அந்த இளவட்டப் பையனைக் கண்டதுமே ரணவீரசாமிக்குப் பழைய நிகழ்ச்சி பளிச் சென்று ஞாபகத்துக்கு வந்தது.

பக்கத்தில் நின்ற சடை நாயைத் தடவி விட்டுக் கொண்டே சுந்தரலிங்கம், ''என்ன.... வழி தப்புறாப்போல வந்திருக்கேயே ?'' என்று இலேசாகப் பேச்சை ஆரம்பித்தார்.

'வழி தப்பாமத்தான் வந்திருக்கிறோம்' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்ட தலையாரி, நிதானமாக, ''நம்ம ரணவீரசாமி மாடுக ராத்திரி காணமப் போயிடுச்சு.... தடம் பார்த்து வந்தோம். தடம்... நம்ம ஊருக்குள்ளேதான் கொண்டாந்து விடுது'' என்றார்.

''அட ! ரணவீரசாமி மாடுக எப்படியய்யா காணமப் போகும்? அவர்தான் பெரிய காவல் புலியாச்சே!'' — சற்று இடக்கான தொனியிலேயே கேட்டார் சுந்தரலிங்கம். எதையோ பேச வேண்டும் என்று வாயெடுத்த ரணவீரசாமி, எதற்கோ அதை அடக்கிக் கொண்டார். ஆனால் மனம் மட்டும் உலைக் களமாகி ரத்தம் அங்கே கொதித்துக் கொண்டிருந்தது.

மாடுகளைத் தேடி வந்தவர்களிடம், மாடுகளின் நிறம், கொம்புக்கட்டு, உயரம் முதலிய அடையாளங்களைச் சம்பிரதாயமாகக் கேட்டறிந்தார் சுந்தரலிங்கம்.

மடத்துக்கு விளக்கு வைத்தாயிற்று.

அந்த இளவட்டப் பையனைப் பார்த்து, ''அட வேல்முருகா ! முதல்லே விருத்தாளிங்



## பெரிய பட்ஜெட் !

சத்யஜித்ரே தம்முடைய சுயசரிதை எழுதியிருக்கிறார். விலை 60 ரூபாய். இதைப் பற்றி 'ஆனந்தர்' பத்திரிகையில் வந்த விமரிசனம்: ''குறைந்த பட்ஜெட் படங்களையே தயாரிக்கும் சத்யஜித்ரேயின் பெரிய பட்ஜெட் தயாரிப்பு''

— பாபு

# ஹேலோ ஷாம்பூகள்–உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே...

## உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன் வளமோங்கித் திகழவே, உபயோகிப்பீர் புரதம் நிறைந்த ஹேலோ எக் ஷாம்பூ

விசேஷ போஷாக்கு மிக்க ஹேலோ எக் ஷாம்பூவின் வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனாக, உங்கள் தலையின் மேல் தசைகளும், கேசமும் வலுப்பெறுகின்றன. கேசம் இயற்கைப் பளபளப்புடன் வளமோங்கித் திகழ்கிறது.




HSR.G.J TH

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு —ஹேலோ கேசப் பராமரிப்பு!**

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:** இந்த விசேஷ உத்தியின்படி தயாரிக்கப்பட்ட ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ லெமன்ஃப்ரெஷ் ஷாம்பூ:** உங்கள் கேசத்திற்கு இயற்கையான, தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்செண்ட்ரேட் ஷாம்பூ:** ஏராளமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.




**ஹேலோ ஷாம்பூகள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன.**

ஒருவர்: என் பிள்ளைக்கு எத்தனை தடவை ஒன்று இரண்டு சொல்லிக் கொடுத்தாலும் பத்துக்கு மேலே சொல்ல மாட்டேனென்கிறானே!

மற்றவர்: கவலைப்படாதீர்கள். எதிர்காலத்தில் அவன் சிறந்த மல்யுத்தப் போட்டி நடுவராக வருவான்!

- த. நாராயணன்



களைக் கட்டிக்கிட்டுப் போயி, ஆளுக்கொரு வீட்டுல சாப்பிடச் சொல்லிக் கூட்டிக்கிட்டு வா'' என்றார் சுந்தரலிங்கம்.

அவன் அவர்களை அழைத்துச் சென்றான்.

ரணவீரசாமி மட்டும், 'தமக்குச் சாப்பாடே தேவையில்லை' என்று பிடிவாதமாகச் சொன்னார். ஆனாலும் அவர்கள் வற்புறுத்தினார்கள். கடைசி வரையில் அவர் சாப்பிடவே இல்லை, கைகால்களைக் கழுவிக் கொண்டதோடு சரி.

ஊர் மடத்துக்கு முன்னால் உள்ள முற்றத்தில், நல்ல நிலவொளியில் வட்டமாக எல்லாரும் வந்து உட்கார்ந்திருந்தார்கள். கிராமத்தில் உள்ள 'சிறிசு, பெரிசு'கள்கூட வந்திருந்தன. துப்புக்கூலிச் சுந்தரலிங்கம் நடுநாயகமாக அமர்ந்தார்.

வாயிலே போட்ட வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே, ''ஐயா, தலையாரிய்யா! நீங்க தேடி வந்த மாடுக வேறெங்கும் போகலே. இங்கேதான் கெடக்குது. கவலைப்படாதீங்க....'' என்றார்.

'' உங்க தயவு என்னைக்கும் வேணும்ய்யா'' என்று தலையாரி குழைந்தார். ''நீங்கதான் மனசு வச்சு....''

''மனசு வைக்காம என்ன...? மாமூலா நடந்துக்கிட்டு இருக்கிறதுல ஏதாவது செய்துட்டு மாடுகளைப் பத்திக்கிட்டுப் போங்க!''

''மாமூல்னா...'' தலையாரி மெதுவாக இழுத்தார்.

''பிறகு என்ன? *துப்புக் கூலி குடுக்க வேண்டாமா?'' உரத்து விழுந்தது குரல்.

''உங்களுக்குத் துப்புக்கூலி குடுத்துட்டுப் பொட்டச்சி மாதிரி எம்மாடுகளைப் பத்திக்கிட்டுப் போவேன்னு நினைச்சீங்களா, பெரியவரே!... இதையெல்லாம் ஏலமாட்டாத பயகிட்ட வைச்சுக்குங்க!'' எழுந்து நின்று மீசை துடிக்கச் சொன்னார் ரணவீரசாமி.

''அந்தப் ப(ரு)ப்பு மட்டும் இங்கே வேகாது தம்பி! எங்க எல்லைக்குள்ள வந்த எந்தப் பொருளுக்கும் துப்புக்கூலி வாங்காம நாங்க விட்டது கிடையாது. நீங்க சரித்திரத்தையே மாத்தப் பார்க்கிறீங்களா?''

''என் மாடுக இந்த ஊருக்குள்ள எவன் வீட்டுல கிடந்தாலும் சரி, உள்ளே நுழைஞ்சு அவுக்கத்தான் போறேன். வர்றவன் வரட்டும்!'' — தடியைத் தூக்கி வீராவேசத்துடன் கிளம்பினார் ரணவீரசாமி.

அதற்குள் கூட்டத்திலிருந்த சிலர், ''ஐயா, வீரசிங்கமே! உங்ககிட்ட மீசையும் இருதா வும் அடர்த்தியா யிருக்குங்கிறதுக்காக, நீங்க போய் மாட்ட அவுக்கும்போது, இந்த ஊர்க்காரங்க எல்லாம் சேலையைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருப்பாங்கன்னு நெனப்பா?'' — என்று சினந்து கேட்டார்கள்.

தலையாரியும் மஞ்சையாவும் ரணவீரசாமியின் வேகத்தைக் கட்டுப்படுத்திக் கீழே இருத்தி வைத்தார்கள்.

பக்கத்திலிருந்த மஞ்சையாவின் தொடையில் தட்டி, கூட்டத்திலிருந்தும் வெளியே அழைத்தார் தலையாரி. மீண்டும் சத்தமின்மை. அரை நாழிகை நேரம் கழித்துத் திரும்பவும் வந்து உட்கார்ந்தார்கள்.

நிலவு உச்சிக்கு வந்திருந்தது.

'' சரி. துப்புக் கூலி எவ்வளவுதான் கேட்குறீங்க?'' தலையாரி கேட்டார்.

திடுக்கிட்டார் ரணவீரசாமி.

'' ஐந்நூறு ரூபாய் குடுத்துட்டு மாட்டைப் பத்திக்கிட்டு போங்க.'' — சுந்தரலிங்கம் சொன்னார்.

''என்னய்யா, மாட்டு விலையிலே நாலுலே ஒரு பங்கா?'' வாயைப் பிளந்தார் மஞ்சையா.

''ரொம்பவும் ஆச்சரியப்படுறீங்களே...! இங்கே எப்படி நடந்துகிட்டு இருக்குதுன்னு, உங்க தலையாரிகிட்ட கேட்டுப் பாருங்க.... *'முன்னடிக் கூலி' கட்டும்படியாக இருக்க வேண்டாமா? மாட்டை அவுத்து வெளியே பத்திக்கிட்டு வரும்போது உங்க கையிலே இவங்க அகப்பட்டுக்கிட்டாங்கன்னா, இவங்க பெண்டாட்டிமார் தாலி இங்கேயல்லவா, அறுந்து விழுந்திருக்கும்! உங்ககிட்ட வாங்குகிற ஐந்நூறு ரூபாய்க் காசு என்னய்யா பெரிசு?''

''குறைக்கிறதுக்கு வழி இருந்தா......'' இது தலையாரியின் கெஞ்சலான இழுவை.

''சரி. நானூத்தி ஐம்பது குடுத்துட்டு மாட்டைக் கையிலே பிடிங்க.... நீங்க இன்னும் ரெண்டு நாளைக்குத் தேடி வராம இருந்தீங்கன்னா, ** 'வளர்ப்புக்கூலி'யின்னு ஒரு நாளைக்குப் பத்து ரூபா ரேட்டுப் போட்டு வசூல் பண்ணிப் போடுவோம்.''

'துப்புக்கூலி' கொடுக்காமல் மாட்டைக் கண்ணிலேகூடக் காட்டமாட்டார்கள் என்பது தலையாரி அனுபவத்தில் கண்ட உண்மை. எனவே, கொஞ்ச நேரத்துக்கு முன்பு மஞ்சையாவிடமிருந்து வாங்கிய இரண்டு மோதிரங்களையும் துப்புக்கூலிச் சுந்தரலிங்கத்திடம் கொடுத்துக் கொண்டே சொன்னார்: ''நாங்க இப்போ ரொக்கமா ரூபா ஒண்ணும் கொண்டுக்கிட்டு வரல்லே. நானூத்தி ஐம்பது

* துப்புக் கூலி: திருட்டுப்போன பொருட்கள் எங்கே இருக்கின்றன என்று அறிந்து வந்து துப்புச் சொல்வதற்காகக் கேட்கப்படும் கூலி. இதில் கிடைக்கும் தொகையைத் துப்புச் சொன்னவரும், திருடிக் கொண்டு போனவர்களும் பங்கு போட்டுக் கொள்வர். துப்புக் கூலியின் உதவியின்றித் திருட்டுப் போன பொருட்களை மீட்டு வருவது என்பது, மயிரைக் கட்டி மலையை இழுப்பது போலாகும்.

* முன்னடிக் கூலி: மாட்டைப் பத்திக் கொண்டு வரும்போது காலில் தைத்த முட்களுக்காக வாங்கப்படும் கூலி.

** வளர்ப்புக் கூலி: களவு மாடுகளைத் தேடி வரும் வரை, வளர்ப்பதற்காக வாங்கப்படும் கூலி.



கணவன்: வரும் வழியில் ஒரு ஹோட்டலில் சாப்பிட்டோமே அந்த ஹோட்டலின் பெயர் என்ன?

மனைவி: சற்றுப் பொறுங்கள். பையிலிருக்கும் டம்ளரைப் பார்த்துச் சொல்கிறேன்.

- த. நாராயணன்

ரூபாய்க்கு ஈடாக இதை வச்சுக்குங்க; நாளை வந்து ரூபாயைக் குடுத்திட்டு, மோதிரத்தைத் திருப்பிக்கிட்டுப் போறோம். இப்போ மாட்ட அவுத்துக் கையிலே கொடுங்க.''

தலையை அசைத்துக் கொண்டே அவற்றைப் பெற்றுக் கொண்டார் சுந்தரலிங்கம்.

ரணவீரசாமிக்கு அதற்கு மேலும் அங்கு பொறுமையாக இருக்க முடியவில்லை. தமக்கு முன்னே கிடந்த தடிக் கம்பை எடுத்துக் கொண்டு தெற்கு பார்த்து நடையைக் கட்டினார்.

சில நிமிஷங்களுக்குப் பின் ''அதோ வந்துட்டார்!'' என்று கூட்டத்திலிருந்து சில வெடிகள் வெடித்துச் சிதறின. எல்லாரும் பின்னுக்குத் திரும்பிப் பார்த்தார்கள். உறவினர் ஒருவரின் துஷ்டிக்கு வெளியூர் போய்விட்டு வருவதாக அவரைப் பற்றிக் கூட்டத்தில் பேசிக் கொண்டார்கள்.

கனத்த கட்டையான கறுத்த உருவம். கருவேல மரம் போன்ற கால்கள், கைகள். தோசைக் கல் மாதிரி ஊடே வழுக்கை விழுந்த தலை. அனல் கக்கும் கண்கள். கோழி அரிவாள் போன்ற நீண்ட மீசை. முரட்டுச் சுபாவத்தைக் காட்டும் நடை.

கூட்டத்தினுள் வந்த அவர், சுந்தரலிங்கத்தின் இருப்புக்குச் சமமாக அவருக்குப் பக்கத்திலே போய் உட்கார்ந்தார். நடந்த விசயத்தை ஆதியோடந்தமாக அவரிடம் ஒப்பித்தார் சுந்தரலிங்கம்.

இரண்டு கைகளையும் இடுப்பிலே வைத்து, தலையை ஒரு பக்கம் இலேசாகச் சாய்த்து ஒரு நிமிடம் யோசனையில் இருந்த அந்த முரட்டு மனிதர், திடீரென எழுந்து நின்று தமக்கு எதிரேயிருந்த அந்த இளவட்டப் பையனைப் பார்த்து, ''டேய்! மாடுகளை அவுத்திட்டு வந்து, அவுக கையிலே கொடு'' என்று கம்பீரமாக ஆணையிட்டார்.

கூட்டம் பிரமித்துப் போனது.

சுந்தரலிங்கத்திடமிருந்து அந்த மோதிரங்களைக் கேட்டு வாங்கிக் கொண்ட அந்த ஈரிய மனிதர், அவற்றைத் தலையாரியிடமே கொடுத்துக் கொண்டு, ''இதை நீங்களே வைச்சுக்குங்க.... மாடுக இப்போ வரும்; பத்திக்கிட்டுப் போங்க!'' என்றார்.

''.....!.....!.....!'' தலையாரி வியப்பால் கண்களை விரியத் திறந்தார்.

''இதை நானே செய்யணும்னுதான் இருந்தேன் தம்பி. ஆனாலும் உடையகாரி, நீ இல்லாமல் எப்படிச் செய்யறதுன்னுதான் தயங்கினேன். நீயும் நல்ல சமயத்திலே வந்துட்டே!'' என்றார் சுந்தரலிங்கம்.

''அதுக்கென்ன மாமா; எல்லாம் நீங்களே தானே!'' என்று சொல்லிக் கொண்டே அவர், தலையாரியையும் அவரைச் சார்ந்த ஏனையோரையும் பரவலாகப் பார்த்துக் கொண்டே, ''பொதுவாகப் பாருங்க..... நம்ம தமிழ் நாட்டிலேயிருந்து அழிஞ்சுபோன எத்தனையோ கலைகள் மாதிரி, இதையும் நாங்க முக்காலேணிம்மாகாணி முக்கால்வீசம் மறந்திட்டோம். இருந்தாலும் உங்க பக்கத்திலே, ரணவீரசாமியின் காவலிலே ஒரு இம்மி கூடக் களவு போகாதுன்னு ஒரு முத்திரை இருந்தது பாருங்க, அதை எப்படியும் உடைச்சே ஆகணும்னு எங்கள்ள பல பேருக்கு ஆசை. அந்த முயற்சியிலே பல தடவை தோல்வியுற்றுத் திரும்பியதும் வாஸ்தவம். கடைசியாக ரணவீரசாமி படுத்திருந்த அவருடைய தொழுவிலேயே கைவரிசையைக் காட்டி அவரை ஜெயிச்சுட்டோம். எங்க சபதமும் முடிஞ்சது..... ரணவீரசாமியும் ஒரு வீரர் பாருங்க. அதுக்கு மதிப்பளிக்கத்தான், வாங்கின துப்புக் கூலியையும் திரும்பக் கொடுக்கிறோம்'' என்றார்.

''......................!''

''இனி மேல் நமக்குள்ளே எந்தவிதக் குரோதத்துக்கும் இடமில்லே. எல்லா விசயத்தையும் ரணவீரசாமியிட்ட போய்ச் சொல்லுங்க!'' — வேண்டிக் கொண்டார் சுந்தரலிங்கம்.

காளைகள் கைமாறின.

அவர்கள் ஊரைவிட்டு வெளியேறும்போது நிலவு மேற்கே சாய்ந்திருந்தது. சந்திரனின் பிரகாசமான ஒளியை ஒரு சிறிய கருமேகக் கூட்டம் வந்து சூழ்ந்து மறைத்ததால் இலேசாக இருள் படர்ந்தது.

பொழுது புறப்படுகிற நேரத்துக்கு மாடுகள் தொழுவத்துக்கு வந்து சேர்ந்தன.

காடிப் பலகைக்குக் கீழே உள்ள மூலையில் காளைகளைக் கட்டிவிட்டுக் கூளம் அள்ளிப் போடுவதற்காகப் பரணுக்குச் சென்றார் மஞ்சையா.

பரண் தொழுவின் வடக்குக் கோடியில் ஒரு முடங்கிப் பக்கம் இருந்தது.

முடங்கிப் பக்கம் காலை வைத்தாரோ இல்லையோ, ஏறிட்டுப் பார்த்தவர் திடுக்கிட்டுப் போனார். மேலே உள்ள விட்டத்தில் கயிற்றைப் போட்டுத் தொங்கிக் கொண்டிருந்தார் ரணவீரசாமி.

ஓடிச் சென்று, தொங்குகிற அவரது கால்களைப் பிடித்து அணைத்துக் கொண்டு, ''மச்சான்..... நான் இப்படி நினைக்கலையே! ரெண்டு நாளைக்கு முன்னாலே நான் கண்ட கனா பலிச்சுட்டுதே, மச்சான்....! ஒரு வேட்டை நாயைக் கழுத்திலே சுருக்குப் போட்டு மொட்டை வண்டியிலே கட்டி அஞ்சாறு பேர்கள் அடிச்சுக் கொன்னுட்டு இருக்காங்களே! இப்படி வரும்னு நினைக்கலையே மச்சான்! நினைக்கலையே....!'' என்று கதறிக் கதறி அழுதார் மஞ்சையா.

எக்காலமும் ரணவீரசாமியோடு அவராகவே இருந்த அந்தக் காப்பி நிறத் தடிக் கம்பு இரண்டாக முறிக்கப்பட்டு அவரது காலடியிலே கிடந்தது.

இணையற்ற எழில்மேனி.
மென்மை. வழவழப்பு. இயற்கையான வனப்பு.




ஆம், லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி எழிலுக்கு மெருகூட்டுகிறது. நீங்களே அதை உணர்ந்து மகிழ்வீர்கள். அதன் மயக்கும் நறுமணம். செழுமையான க்ரீம் இணைந்த நுரை. மேனியைப் பட்டுப்போன்று தழுவிச் செல்கிறது. லக்ஸ் ஸுப்ரீம் ப்யூடி க்ரீம் உங்கள் எழில் மேனியை மென்மையாகவும், வழவழப்பாகவும், இயற்கையான வனப்புடனும் வைக்கிறது.




வேறு எந்த சோப்பையும் பற்றிய சிந்தனையும் எழாது.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HLLS.1060

# பாடுவோம் பாப் மியூசிக்!

10

கதை: தமயந்தி/சாருகேசி

சித்திரம்: ராஜு
















ஏன்னா அவர் பையன் பாலாஜி ஒரு அரை லூஸ் இருக்கு. அதுக்கு வடக்கத்திப் பாட்டுத் தான் பிடிக்கும். அதனாலே எங்க முதலாளிக்கும் அது தான் பிடிக்கும்.


ஓ, அப்படியா சமாசாரம்! பாலாஜி கெட்டிக்காரன்னு கேள்விப்பட்டேனே?


யார் சொன்னது? சரியான கிறுக்கு சார். தொழிலகத்திலே திடீர் திடீர்னு வந்து கலாட்டா பண்ணும். நம்ம ஃபோர்மன் தலை வழுக்கையா? தபலா வாசிக்கலாம் இவர் தலைலேயும்...
சரியாப் போச்சு!


அப்ப தேதி கொடுத்துடறீங்களா சார்?
மே முதல் தேதி தானே? ஓகே. ஆறு மணிக்கா, ஏழு மணிக்கா?


ஆறு மணிக்கு விழா ஆரம்பம். ஏழு மணிக்கு உங்க பாப் மியூசிக்.
வெளுத்துக் கட்டிடலாம் மூணு மணி நேரம்.


பிடியுங்க சார் அட்வான்ஸ் நூறு ரூபா.
நல்லது. அப்புறம் முதலாளி மிரட்டி னார்னு வடக்கத்திப் பாட்டு போட்டுடாதீங்க!

தொடரும்

● ஸைக்லோன் 'பி' அடங்கிய டின்

# புது உலகம் கண்டேன்!

## 10. வரலாற்றின் சோகச் சுவடுகள்

போலந்தின் கலாசார நகரமாகிய க்ராக்கோ அருகே கண்ட உப்புச் சுரங்கம் எவ்வளவுக்கு இனித்ததோ அவ்வளவுக்கு மனத்தை உருக்கிக் கண்களில் நீர் நெகிழச் செய்த வேறொன்றையும் அங்கே போலந்தில் காண நேர்ந்தது.

அதுதான் க்ராக்கோ நகருக்கு மேற்கே நகருக்கு நாற்பது மைல் தொலைவில் இருந்த பழைய நாஜி 'கான்ஸென்ட்ரேஷன் கேம்ப்.' 'ஓஸ்வியேஞ்சிம்' (Oswiecim) என்பது அதன் பெயர். ஜெர்மன் மொழியில் மேற்கண்ட படி கூறும் இந்தக் கைதிகள் முகாம் (1940–45) ஒரு சோக வரலாறு. இங்கே போய்விட்டுத் திரும்பும்போது நமக்கு மிகவும் வேண்டியவர்களாயிருந்தவர்களின் கல்லறைகளுக்குச் சென்றுவிட்டுத் திரும்புவது போல் உணர்கிறோம். 'இப்படியும் கொடுமைகள் நடந்திருக்க முடியுமா ?' என்று எண்ணும் அளவுக்கு நாஜிகளால் யூதர்கள் அங்கு கொடுமைப்படுத்தப்பட்டிருப்பதை உணர்கிறோம். பல்வேறு ஐரோப்பிய நாடுகளைச் சேர்ந்த யூதர்கள் வயது வித்தியாசமின்றி இந்த முகாமில் கொடுமைப்படுத்தப்பட்டதன் அடையாளங்களை இன்றும் நெஞ்சுருக, உணர்வுகள் குமுறக் காணலாம். ஒரு பொருட்காட்சியை அல்லது பழைய மாளிகையைப் பார்க்கப் போவது போல் 'ஓஸ்வியேஞ்சிம்' கைதிகள் முகாமைப் பார்க்கப் போய்விட்டுத் திரும்பி விட முடியாது. எதைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறோம் என்ற உணர்வு போகும் போதும், 'எதைப் பார்த்துவிட்டு வந்தோம்,' என்ற உணர்வு திரும்பி வரும் போதுமாக மனத்தில் தங்கியிருந்து அப்பயணத்தை ஒரு மனம் தோய்ந்த Sentimental Journey ஆக்கிவிடுகிறது. 1940க்கும் 45க்கும் இடைப்பட்ட காலத்தில் சுமார் நான்கு மில்லியன் மக்கள் இந்தக் கைதி முகாமில் சிக்கி அழிந்திருக்கின்றனர் என்று கேள்விப்படும்போது அப்படியே திக்பிரமை பிடித்து நின்று விடுகிறோம். 'கான்ஸென்ட்ரேஷன் கேம்ப்' என்றால் என்ன என்பதை முழுமையாகப் புரிய வைக்கிற இடம் இதுதான்.

நானும் – போலிஷ் கலாசார அமைச்சரகம் எனக்கு உதவியாளராக அனுப்பியிருந்த 'மாரெக்'கும் க்ராக்கோ நகரிலிருந்து ஓர் அதிகாலையில் ரயில் மூலம் இந்தக் கைதிகள் முகாமைச் சுற்றிப் பார்ப்பதற்காகப் புறப்பட்டோம். முதல் நாள் ஓரளவு தெளிவாக இருந்த வானம் அன்று காலை முதலே இருண்டு கொண்டு மப்பும் மந்தாரமுமாக இருந்தது. இடையிடையே வெண்பனியும் பெய்தது.



● கைதியின் தினசரி உணவு

நடுவே ஒரு நிலையத்தில் இறங்கிச் சிறிது நேரம் காத்திருந்து இரயில் மாற வேண்டியிருந்தது. அப்படியும் இப்படியுமாகப் பதினொன்றரை மணிக்குத்தான் 'ஒஸ்வியேஞ்சிமு'க்காக இறங்க வேண்டிய இரயில் நிலையத்துக்குப் போய்ச் சேர முடிந்தது.

முன்பு என்றோ அந்தக் கைதி முகாமில் இறந்துவிட்ட தன் பெற்றோர்களுக்கு மலர் வைத்து அஞ்சலி செலுத்த வரும் ஒரு யூதக் குடும்பம், அங்கே பல்லாண்டுகளுக்கு முன்பு நாஜிகளால் சுடப்பட்ட தன் கணவனுக்கு மனம் உருகி மரியாதை செலுத்த வரும் ஒரு கிழவி, சிறுவர், சிறுமிகள் என்று நம்மோடு இரயிலில் அங்கே வந்து இறங்குகிற கூட்டம் முழுவதுமே — முன்பு

# நா. பார்த்தசாரதி

கைதிகள் முகாமாக இருந்து இன்று வெறும் பொருட்காட்சியாக மாறிவிட்ட 'ஒஸ்வியேஞ்சியத்'தோடு ஏதோ ஒருவிதத்தில் தொடர்பு உடையவர்களாகத்தான் இருக்கிறார்கள். இரயில் நிலைய வாசலிலேயே — பிளாஸ்டிக் பைகளில், உறைகளில், பூங்கொத்துக்கள், மலர் வளையங்கள் விற்கிற கடைகளைப் பார்க்கிறோம். கடந்த கால சோகத்தின் அடையாளங்கள் அங்கேயே தெரியத் தொடங்கி விடுகின்றன. நம்மிடமும் நம்மைச் சுற்றியிருப்பவரிடமும் வீண் அரட்டைகள், கேலிப் பேச்சுக்கள், வெடிச் சிரிப்புக்கள், எல்லாம் அங்கேயே அந்த நிமிடத்திலேயே கழன்றுவிடுகின்றன. சோகம் வந்து கவிந்து விடுகிறது. இரயில் நிலையத்திலிருந்து பஸ்ஸில் பத்து நிமிஷங்கள் அல்லது நடந்து அரைமணி நேரத்தில் செல்ல முடிந்த தொலைவில் அந்த முகாம் அமைந்திருக்கிறது. நாற்பது சதுர கிலோ மீட்டர் பரப்பளவு நிலத்தில் அமைந்துள்ள இந்த முகாமை 1944க்குப் பின் நாஜிகளிடமிருந்து மீட்டு எஞ்சிய கைதிகளை விடுவித்த பின் அப்படியே இருந்தது இருந்தபடியே ஒரு பொருட்காட்சியாக மாற்றியிருக்கிறார்கள். இப்படிக் கைதி முகாம்கள் பிறந்தது ஒரு தனிக் கதை.

1935—நூரன்பர்க் பிரகடனப்படி ஏற்பட்ட புதிய சட்டங்களால் ஜெர்மானியர்களுக்கும் யூதர்களுக்கும் இன உயர்வு தாழ்வுகள் கற்பிக்கப்பட்டன. யூத நூல்கள், யூதர் கடைகள், யூதர்களின் ஆலயங்கள் (Synogogues) அழிக்கப்பட்டன. யூத வெறுப்பு வளர்ந்தது. ஹிட்லரின் கட்சியான நேஷனல் சோஷலிஸ்டிக் ஜெர்மன் வொர்க்கர்ஸ் பார்ட்டி (NSDAP) ஹிட்லர், கோயபல்ஸ் முதலிய தலைவர்களின் அதரவோடு யூதத் துவேஷ வேலைகளிலும் பிரசாரத்திலும் தீவிரமாக இறங்கும்படி முடுக்கி விடப்பட்டது. 'மெயின் காம்ப்' இவர்களின் பைபிளாக மாறியது. இதற்கேற்ப நாஜி படைகள் திருத்தி அமைக்கப்பட்டன. ஐரோப்பா முழுவதும் ஜெர்மானியர்களின் ஒரே கட்டுப்பாட்டுக்குள் அடக்கப்பட வேண்டும் என்ற உணர்வு பரப்பப்பட்டது. 1937ல் ஸந்தோஃபென் ரகசியப்படைப் பள்ளியில் (S.S. Political School of Sonthofen) பேசும் போது, ''ஜெர்மானியர்களுக்கு அதிக நிலப் பரப்பு வேண்டும்'' என்று ஹிட்லரால் முழக்கப்பட்டது. 1938ல் ஆஸ்டிரியாவை நாஜிப் படைகள் ஆக்கிரமித்தன. பின்பு செக்கோஸ்லோவக்கியாவின் ஒரு பகுதி பிடிக்கப்பட்டது. இறுதியாக அதை முழுவதும் பிடித்தபின் 1939ல்—ஹிட்லரின் கண் போலந்தின் மேல் விழுந்தது. போலந்தின் மேல் ஹிட்லர் படையெடுத்ததும் இரண்டாவது உலகப் போர் தொடங்கியது.

இவ்வாறு தொடங்கிய இந்தப் போரில் ஹிட்லரால் பிடிக்கப்பட்ட நாடுகளின் கைதிகள், போர் வீரர்கள், — குறிப்பாக யூதர்கள் எல்லாரையும் தனியே அடைத்து வைப்பதற்குப் பல கைதி முகாம்கள் (Concentration Camps) தேவைப்பட்டன. ஏராளமான கைதி முகாம்கள் இரகசிய இடங்களில் நாஜிகளால் அமைக்கப்பட்டன. ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என்று சிறைப் பிடிக்கப்பட்ட பல வகை மக்கள் இந்த முகாம்களில் அடைக்கப்பட்டனர்; கொடுமைப் படுத்தப்பட்டனர்.

இவற்றில் மிகப் பெரிய கைதிகளின் முகாம்கள்தான் 'ஒஸ்வியேஞ்சிம் — பிர்க்கெனவ்' என்பவை. கைதி முகாம்களைத் தவிர நிர்மூலப்படுத்தும் நிலையங்கள் (Extermination Camps) வேறு ஏற்படுத்தப்பட்டன. நாஜிகளின் எல்லாக் கைதி முகாம்களிலும் சேர்ந்து சுமார் ஒரு கோடி மக்கள் சிரழிந்திருப்பார்கள் என்று இப்போது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இதில் நாற்பது லட்சம் மக்கள் தனியாக இந்த ஒரு முகாமிலேயே அழிந்திருக்கிறார்கள் என்று சொன்னாலே இது எவ்வளவு பெரிய கொடுமைக் களமாக இருந்தது என்பது புரிந்துவிடும். செய்தி போக்குவரத்துத் தொடர்புகளால் அணுக முடியாததாகவும் — ஒதுங்கி இருப்பதாகவும் கருதி இந்த இடம் (ஒஸ்வியேஞ்சிம்) கைதி முகாமுக்கு நாஜிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டது. 1941ம் வருஷ முதல் இதற்குக் கைதிகள் அனுப்பப்பட்டனர். 'ஒஸ்வியேஞ்சிமும் அதன் மூன்று பிரிவுகளும் நாற்பது துணை முகாம்களும் சுறுசுறுப்பாக இயங்கிக் கைதிகளைக் கொடுமைப்படுத்தத் தொடங்கின. பல ஆயிரம்



● சோவியத் ராணுவம் விடுவித்த குழந்தை கைதிகள்



கால் இல்லாத
டேபிள் எது ?
டைம் டேபிள் !
-கீதா

கிலோமீட்டர்கள் சிரமமான பயணத்துக்குப் பின் கைதிகள் ஐரோப்பாவின் பல பகுதிகளிலிருந்து இங்கு கொண்டு வரப்பட்டார்கள்.

கைதிகளால் '**மரணவாயில்**' என்று அழைக்கப்பட்ட 'ஓஸ்வியேஞ்சியத்'தின் பிரதான வாசலில் நுழைந்தபின் ஒவ்வொரு கைதிக்கும் சொந்தப் பெயர் போய் ஏதாவதொர் எண் குறிக்கப்படும். முகாமின் வழக்கப்படி இடது முழங் கையில் அழிக்க முடியாதபடி இந்த வரிசை எண் பச்சை குத்தப்பட்டுவிடும்.

முகாமில் தரப்படும் உள்ளங்கி, மேல் சட்டை, கால் சட்டை எல்லாவற்றிலும் ஒரு முக்கோண அடையாளத்தினுள்ளே கைதி எந்த நாடோ அந்த நாட்டின் பெயருக்குரிய முதல் எழுத்து ஜெர்மன் மொழியில் எழுதப்பட்டிருக்கும். முகாமுக்குள் அனுமதிப்பதற்கு முன் சில வார காலத்துக்குக் கடுமையான 'குவாரன்டைன்' ஏற்பாடு உண்டு.

ஆரம்பத்தில் கைதிகளுக்குத் தினமும் மூன்று வேளை வருகைப் பட்டியல் கூப்பிடும் (Roll Call) வழக்கம் இருந்தது. பின்னால் அது காலை, மாலை என்று இரண்டு வேளையாகக் குறைந்து, இறுதியில் மாலையில் ஒரே ஒரு வேளை மட்டும் என்று ஆகிவிட்டது. கடுமையான குளிர் காலத்தில்கூடக் கால்களில் செருப்பில்லாமல் திறந்தவெளியில் கைதிகளை நிறுத்தி வைத்து வருகைக் கணக்கு எடுத்தார்கள் என்று தெரிகிறது. கைதிகளை இம்சிக்கும் நோக்குடன் சில சமயம் ரோல் கால் நேரம் நீடிக்கப்படுவதுமுண்டு.

முகாமின் சுற்றுப்புற வேலியான ஒன்றரை ஆள் உயர முள் கம்பிகளில் எப்போதும் உயிரோட்டமாக மின்சாரம் ஓடிக் கொண்டிருக்குமாம். கம்பி வேலியைத் தாண்டித் தப்பி ஓட முற்படும் எந்தக் கைதிக்கும் மின்சாரத்தால் சாவு நேர்வதுதான் விதி. தங்கள் மரணத்துக்குத் தாங்களே குழி தோண்டிக் கொள்வது போல் முகாமின் தண்டனைக் கேந்திரங்களான காஸ் சேம்பர், கிரெமட்டோரியம் ஆகியவற்றையும், இந்தக் கைதிகளே உழைத்துக் கட்டியிருக்கிறார்கள். பெரும்பாலான கைதிகள் உணவுப் பற்றாக்குறையினாலும், சுகாதார வசதிகள் இன்மையினாலும், முகாமுக்கு வந்த சில நாட்களிலேயே வற்றி மெலிந்து எலும்பும் தோலுமாக நடைப்பிணமாகியிருக்கிறார்கள். அவர்களின் நடைப்பிணப் படங்களை இன்றும் இம்முகாமில் பார்க்கலாம்.

கைதிகளில் சிலர் எடுத்து வெளியே அனுப்பிய புகைப்படங்கள் மூலமும், முகாம் விடுவிக்கப்பட்ட போது மீட்கப்பட்ட கைதிகளின் புகைப்படங்கள் மூலமும் என்லார்ஜ் செய்யப்பட்ட உருவங்கள் சிலவற்றை முகாமில் இப்போது காட்சிக்கு வைத்திருக்கிறார்கள். அவற்றைக் காணும்போது இரத்தக் கண்ணீர் வடிக்க நேரிடுகிறது. கொழுப்புச் சத்தும், புரதச் சத்தும் இல்லாத மிகக் குறைந்த அளவு உணவே கைதிகளுக்குத் தரப்பட்டிருக்கின்றன. அந்த உணவின் அளவுகூட இப்போது காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

இந்த முகாமின் பல்வேறு பகுதிகளிலும் நம்மை அறியாமலே நெஞ்சம் பதறித் துணுக்குற்று மெய்ம்மறந்து நின்றுவிட நேரிடுகிறது.

முகாமில் கொல்லப்பட்ட யூதர்கள் ஆண் பெண் கைதிகளின் தலை முடிகள் மலையளவு அம்பாரமாய் ஓர் அகன்ற கண்ணாடி அறையில் காட்சியாகக் குவித்து வைக்கப்பட்டிருக்கின்றன. காஸ் சேம்பரிலோ, கிரெமட்டோரியத்திலோ தள்ளிக் கொல்லுவதற்குமுன் தலைமயிரை நீக்கிவிடுவது முகாமின் வழக்கமாக இருந்திருக்கிறது.

இன்னொருபுறம் முகாமுக்கு வந்த கைதிகள் வரும்போது கொண்டு வந்து முகாம் அதிகாரிகளால் பறிக்கப்பட்ட சூட்கேஸ்களின் மலை குவிந்து கிடக்கிறது. அவற்றில் சில சூட்கேஸ்களில் தெளிவாக விலாசங்களைக் கூடப் படிக்கலாம்.

கைதிகளின் டூத் பிரஷ்கள் (பேபி—ஜூனியர் பிரஷ்கள் உட்பட) ஷேவிங் பிரஷ்கள், சோப்பு டப்பா பாத்திரம் பண்டங்கள், ஒரு புறம் குவிக்கப்பட்டுள்ளன. கைதிகளில் கால் முடமானவர்கள் நடப்பதற்கு உபயோகித்த செயற்கைக் கருவிகள் மற்றொரு பக்கம் குவிக்கப்பட்டிருந்தன. கைதிகளிடமிருந்து பறிக்கப்பட்டு உடைத்த மூக்குக் கண்ணாடி ஃப்ரேம்கள் ஒரு பக்கம் பெரும் குவியலாகக் குவிக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றாகப் பார்க்கப் பார்க்க ஃபாஸிஸத்தின் கொடிய கரங்களில் மனித குலம் எப்படி எல்லாம் நாசமாகியுள்ளது என்று எண்ணிப் பெருமூச்சு வந்தது.

யார் யாரைக் கொன்றுவிட எண்ணினார்களோ அவர்களைக் கொல்வதற்காக இந்தக் கைதி முகாமில். அதிகாரிகள் மேற்கொண்ட முறைகளைப் பார்த்த போதும், படித்த போதும், கேள்வியுற்றபோதும் பல இரவுகள் தூங்கக்கூட முடியவில்லை.

பலரை மொத்தமாகத் தரைக்கடியில் இருக்கும் கிரெமட்டோரியத்துக்கு அனுப்பி எரித்துவிடுவது, வரிசையாகத் தூக்கிலிடுவது, சைக்-ளோன் – பி (Cyclon B) என்னும் விஷ வாயுவால் கொல்வது என்று விதம் விதமான கொடுமைகள் இங்கு மேற்கொள்ளப்பட்டன. சிறியவர்கள் பெரியவர்கள் என்ற பேதமின்றி ஆண்கள், பெண்கள் என்ற பேதமின்றிக் குழந்தைகள் முதியவர்கள் என்ற பேதமின்றி அனைவரையும் இப்படித் தீர்த்துக் கட்டியிருக்கிறார்கள்.

சைக்ளோன் – பி – கொடுமை பயங்கரமானது. டப்பாக்களில் அடைக்கப்பட்ட சிறு சிறு கோதுமை மணிகளைப் போன்ற படிவங்கள் **விஷவாயுவாக** மாறும். இந்த விஷ வாயு செலுத்தப்பட்ட பதினைந்து இருபது நிமிஷங்களுக்குள் 'காஸ் சேம்ப'ருக்குள் அடைபட்டவர்கள் மூச்சுத் திணறித் திக்குமுக்காடி இறந்து போக நேரிடும். விதம் விதமான முறையில் கூட்டம் கூட்டமாகக் கைதிகளை இப்படி விஷ வாயுவால் கொன்றிருக்கிறார்கள்.

கைதிகளுக்குத் தாங்கள் கொல்வதற்காக அழைத்துச் செல்லப்படுகிறோம் என்ற சந்தேகமே வராமல் இருப்பதற்காக, ''குளிப்பதற்காகச் செல்லுங்கள்'' என்பதாகச் சொல்லி அனுப்புவார்கள். நூறு இருநூறு பேர் வரிசையாக நிற்கிறாற்போல் 'ஷவர்'கள்



கம்ப்யூட்டரில் ஒரு கோளாறு வந்தது. டெக்னீஷியனைக் கூப்பிட்டாள் சொந்தக்காரி. அவன் வந்து பார்த்து ஓர் இடத்தில் தட்டினான். அது வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. "சார்ஜ் ஐம்பது டாலர்" என்றான் அவன். "என்ன? ஒரு தட்டுத் தட்டியதற்கு ஐம்பது டாலரா?" என்றாள் அவள்.

"அம்மணி! தட்டியதற்கு என்னவோ ஒரு டாலர் தான் சார்ஜ்! ஆனால் எங்கே தட்ட வேண்டும் என்று கண்டுபிடித்தேனே, அதற்குத்தான் நாற்பத்தொன்பது டாலர்" என்றான். கோ. நீபா

---

பொருத்தப்பட்டுள்ள கூடத்தில் போய்க் கைதிகள் குளிக்கும் ஆவலோடு ஷவரைத் திருப்பியதும் ஷவரின் துவாரங்களிலிருந்து சைக்ளோன் - பி விஷ வாயு பீறிட்டுக் கிளம்பும். அனைவரும் கூண்டோடு சாவார்கள். வெளியே ஓடித் தப்ப முடியாதபடி கதவுகள் தாழிடப்பட்டிருக்கும். முதலிலேயே சந்தேகப் பட்டுக் 'காஸ் சேம்பருக்குள்' வர மறுக்கிற கைதிகள் மேல் நாய்களை ஏவிவிட்டுக் கடிக்கச் செய்தும், குண்டாந்தடியால் தாக்கியும் துன்புறுத்திச் சேம்பருக்கு உள்ளே தள்ளுவது வழக்கமாம்.

காஸ் சேம்பரில் மூச்சுத் திணறி இறந்தவர்களை எரிக்க அனுப்புமுன் தங்க மோதிரங்கள், தங்கக் காதணிகள், தங்கப் பற்கள், பிளாட்டினம் பற்கள் உட்படக் கைதி முகாமின் அதிகாரிகளால் எடுத்துக் கொள்ளப்பட்டு விடுமாம். தாடையை உடைத்துத் தங்கப் பற்களை அவசர அவசரமாகத் தட்டி எடுக்கவும் ஜெர்மன் எஸ். எஸ். (Secret Service) அதிகாரிகள் தயங்க மாட்டார்கள் என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

சில முகாம்களில் — முகாம் அதிகாரிகளுக்குத் தீராத பிரச்னையாயிருந்த நூற்றுக்கணக்கான யூதக் குழந்தைகளைக்கூட சைக்ளோன்பி விஷ வாயு மூலமாகத் தீர்த்துக் கட்டியிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் முகாமில் பணி புரிந்த நாஜி அதிகாரிகளின் டைரிகளிலிருந்தே கண்டு பிடித்து எழுதி வைத்திருக்கிறார்கள். இந்த முகாமில் கொல்லப்பட்டவர்களின் தலையிலிருந்து கத்திரித்து எறியப்பட்ட 7000 கிலோகிராம் மனித ரோமமும், 348,820 ஆண்களின் சூட்டுகோட்டுகளும், 836,525 பெண்களின் உடைகளும், 38000 ஜோடி ஆண்களின் பூட்ஸுகளும், 5,255 ஜோடி பெண்களின் காலணிகளும் 13,694 கம்பளங்களும், பிறவும் இன்றும் பொருட்காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

இவற்றை ஒவ்வொரு பிளாக்காக ஒவ்வோர் அறையாகப் பார்க்கும் போது எத்தகைய கல்நெஞ்சனுக்கும் கண்களில் நீர் நெகிழ்ந்துவிடும்.

இவ்வளவு கொடுமைகளிலும் அங்கிருந்த கைதிகள் — தங்கள் நிலைமைகளை வெளி உலகுக்கு அறிவிக்க இரகசியமாகச் சில கடிதங்கள் அனுப்பியிருக்கிறார்கள். யாரும் அறியாமல் புகைப்படங்கள் எடுத்து வெளி உலகத்துக்கு அனுப்பியிருக்கிறார்கள். இரகசியக் கருவிகள் மூலம் பல நாடுகளுக்குத் தந்திகள், செய்திகள் அனுப்ப முயன்றிருக்கிறார்கள்; அனுப்பியிருக்கிறார்கள்.

இந்த முகாம் உக்கிரமாக இயங்கிய 1941—44 கால கட்டத்தில் சுமார் 20,000 கிலோகிராம் சைக்ளோன் — பி — விஷ வாயுவைக் கைதிகளைக் கொல்வதற்கு மட்டும் உபயோகப்படுத்தியிருக்கிறார்கள். அப்படி உபயோகித்துவிட்டுத் தூக்கியெறிந்த காலி — சைக்ளோன் — பி டப்பாக்கள் வேறு ஒரு பெரும் குவியலாக இந்தக் கண்காட்சியிலேயே இன்று வைக்கப்பட்டுள்ளன. 'ஓஸ்வியெஞ்சி'முக்குச் சுற்றிலும் அமைக்கப்பட்ட பல ஜெர்மன் தொழிற்சாலைகளில் இடமாக இருந்த கைதிகள் நாளொன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரத்துக்கு மேல் உழைக்க அனுப்பப்பட்டு இருக்கிறார்கள். பின்னால் தங்களையே கொல்லப் போகிற விஷ வாயு சைக்ளோன் — பி தயாரிக்கப்படுகிற தொழிற்சாலையிலேயே பல கைதிகள் வேலை செய்திருக்கிறார்கள். 'சைக்ளோன் — பி' உற்பத்தி செய்திருக்கிறார்கள்.

முகாமின் பதினோராவது பிளாக்கில் ஒரு நெருக்கமான இடத்தில் பதினாறு கைதிகள் நிற்க மட்டுமே (Standing Cells) இடம் இருக்கிறது. வெளிச்சம் கிடையாது. உட்கார முடியாது. கடுமையான தண்டனையாகச் சாகிற வரை உண்ணவும் பருகவும் எதுவுமே தராமல் நிற்க வைத்துப் பட்டினியாலேயே சாக விட்டு விடும் பிளாக் இது. இதனால் சாவு அறை (Death Bloc) என்றுதான் கைதிகள் இந்தப் பதினோராவது பிளாக்கை அழைத்தனர். இன்னும் அங்கு அளிக்கப்பட்டதாகத் தெரிய வரும் சில தண்டனைகளை எழுத்தில் எழுத முடியாது. சொற்களால் சொல்ல முடியாது. அவ்வளவு கடுமையான தண்டனைகள் எல்லாம் தரப்பட்டதற்கான சாட்சியங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

தண்டிக்கப்பட்ட கைதிகள் மொத்தமாக எரிக்கப்பட்ட பகுதியிலிருந்து சாம்பல் எடுத்து இட்டு நினைவுச் சின்னம் கட்டப்பட்டுள்ளது. முகாமில் உயிர் இழந்த அனைத்து நாடுகளின் கைதிகளுக்கும் மரியாதை செலுத்தும் வகையில் அனைத்து நாட்டுக்கொடிகளும் ஓரிடத்தில் இணைந்து பறக்கின்றன.

ஒவ்வொரு பிளாக்கிலும், ஒவ்வொரு பகுதியிலும் யார் யாரோ — யார் யாருக்காகவோ கண்ணீரையும்—மலர்களையும் வைத்துக் கொண்டு வந்து வாடி நிற்கிறார்கள்.

ஒரு தலை முறையின் பெரிய யுத்தம் ஒன்றால் அடுத்த சில தலைமுறைகளை அழ வைத்திருக்கும் இந்தக் கைதிகள் முகாம் இன்று ஓர் எச்சரிக்கையாக மட்டுமே திகழ்கிறது. போரின் அபாயங்களை எச்சரிக்கிறது. ஃபாஸிஸத்தைப் பற்றி எச்சரிக்கிறது. யுத்தம் மனிதர்களை எப்படி அழிக்கிறது எனப் பயமுறுத்தி எச்சரிக்கிறது. பகல் முதல் மாலை நாலு மணி வரை 'ஓஸ்வியெஞ்சிம்' கான்ஸென்ட்ரேஷன் முகாமைப் பார்த்து முடித்தபின், உடன் வந்த உதவியாளர் பகலுணவு பற்றி விசாரித்தார். "இன்று பகல் உணவு வேண்டியதில்லை. சாப்பாடு உள்ளே இறங்காது" என்று மறுத்துவிட்டேன் நான். (தொடரும்)



# சேரமான் காதலி

## கண்ணதாசன்

அத்தியாயம் 3

## நான்கு குவளைகள்

**அ**ரண்மனை விவாத மண்டபத்தில் கைகளைக் கட்டியபடி முன்னும் பின்னும் உலாவிக் கொண்டிருந்தார், மன்னவர் மூன்றாம் சேரமான்.

சேர மண்டலத்தின் மணிமகுடத்தை உரிமை கொண்டுவிட்ட மன்னவர் பாஸ்கர ரவிவர்மன் என்ற மூன்றாம் சேரமானை இனி இரண்டாவது பேரிலேயே அழைப்போம்.

''...அழைத்ததாகச் செய்தி வந்தது'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தார் நாராயண நம்பூதிரி.

''தம்பிரான் சுவாமிகளுக்கு வணக்கம்'' என்று பணிவோடு சொன்னார் மூன்றாம் சேரமான்.

பதிலுக்குத் தலை அசைத்தார் நாராயண நம்பூதிரி.

நம்பூதிரிகள் கையெடுத்து யாரையும் வணங்குவதில்லை; அவர்கள் மன்னர்களாயினும் சரியே !

'' நாடு அமைதியாக இருக்கிறது ; மக்கள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். நிம்மதியான சூழ்நிலை நீண்டநாட்களுக்குப்பின் வாய்த்திருக்கிறது. மன்னவர் குலசேகர ஆழ்வார் மகுடம் துறக்கும் வரை திருவஞ்சைக் களத்தில் எவ்வளவு அமைதி நிலவிற்றோ, அதே அமைதி இப்போதும் நிலவுகிறது. ஆகவேதான் தங்கள் அழைப்பில் அவசரமான காரியம் ஏதும் இருக்காது என்று கருதி நான் சற்றுத் தாமதித்தே வந்தேன். செய்தி என்னவோ...?'' என்றார், நாராயண நம்பூதிரி.

''தம்பிரான், சுவாமி, நாடு நிம்மதியாய் இருக்கும்போது நான் நிம்மதி இழந்தவனாகி விட்டேன். பிறரிடம் சொல்லி ஆறுதல் தேட முடியாத நினைவுகளும், கனவுகளும் என் நெஞ்சை உலுக்குகின்றன. ஆயினும், நான் எடுத்த முடிவு தவறு என்று கருதவில்லை. இனி அதன் விளைவுகளையும், எதிரொலியையும் பற்றியே எனக்கு ஓர் அச்சமிருக்கிறது. நான் வெறும் பாஸ்கர ரவிவர்மனாக இருந்தபோது எனக்கிருந்த தைரியம், பொறுப்புக்கு வந்த பின் குறைந்து வருவதைக் காண்கிறேன். என்னால் தீர்வு காணமுடியாத ஒரு கேள்விக்கு விடை காணவே தங்களை இங்கு அழைத்தேன்.''

''நல்லது. ஆனால் இதுவரை நீங்கள் சொன்ன விஷயங்களை எவ்வளவு அறிவாற்றல் உள்ள அமைச்சரும் புரிந்து கொள்ள முடியாது. ஓவியத்தை உள்ளே வைத்துக் கொண்டு கோடுகளை மட்டுமே காட்டியிருக்கின்றீர்கள். அது என்ன ஓவியம் என்று எப்படி நான் கண்டுபிடிப்பது?''

''இதை நான் சொல்வது உங்களிடம் என்பதால்தான் என்னால் சொல்ல முடியவில்லை.''

''இரகசியங்களைப் பரிமாறிக் கொள்ளவே நான் இங்கே இருக்கிறேன்.''

''அந்தத் தைரியம்தான் உங்களை அழைக்கும்போது எனக்கு இருந்தது.''

''இப்போதும் அது இருக்கலாம்.''

''தம்பிரான் சுவாமி ! சில விஷயங்களில் நான் விளையாட்டுப்பிள்ளை அல்ல. வேடிக்கையாகப் பொழுது போக்க விரும்பினால்கூட வில்லங்கங்களில் மாட்டிக் கொள்வதில்லை.''

'' நான் அறிவேன்.''

'' சில ஆண்டுகளாக என் நாடித் துடிப்போடு வேறொரு நாடியும் சேர்ந்து துடிக்கிறது.''

''கேள்விப்பட்டிருக்கிறேன்.''

— நாராயண நம்பூதிரி இப்படிச் சொன்னாரோ, இல்லையோ, மூன்றாம் சேரமான் ஒரு கணம் திகைத்தார்.

'' தம்பிரான் சுவாமி, இன்று **செரோட்டி தேவி**யாகிவிட்ட பத்மாவதியை நான் எந்த நிர்ப்பந்தத்தில் மணம் முடித்துக் கொண்டேன் என்பது

தங்களுக்குத் தெரியாததல்ல. ஒரு வகையில் அது கட்டாயத் திருமணமே! ஆயினும் அவளை நான் அடியோடு புறக்கணித்ததில்லை. இன்று அவள் திருவஞ்சைக்களத்தின் மகாராணி. உரிமைக்குப் பாத்தியப்பட்டவள். பெருமைக்கும் பாத்திரமாகி யிருக்கிறாள். அது வரையில் சேர வம்சத்தின் சரித்திரத்துக்கு எந்தக் குந்தகமும் இல்லை. ஆனால் அன்புக்கும், காதலுக்கும் ஏங்கிய என் உள்ளம் ஒரு சிறிய தடாகத்தில் பூத்த ஒரு புதிய தாமரையைத் தேடிக் கொண்டு விட்டது. அது வெறும் ரத்தத் துடிப்பின் சபலமல்ல. கால தேவதை என் காட்டில் பெய்த மழை. ஆனால், தளபதி பாஸ்கர ரவிவர்மனாக இருந்த வரையில் அவை அனைத்தும் சரியே. இனி.....?''

''இனியும் அது சரியே! ஆனால், மன்னவ, நமக்கென்று சில சமூக சம்பிரதாயங்கள் உண்டு. அந்தச் சம்பிரதாய வேலிகளுக்கு அப்பால், ஓர் உறவைத் தேடிக் கொள்ளும்போது நம்முடைய வண்ணம் அந்தத் தேகத்தில் பூசப்பட வேண்டுமே தவிர, அந்த வண்ணத்தை நாம் ஒட்டிக் கொள்ள முடியாது.''

''மத மாறுபாட்டை நீங்கள் குறிக்கிறீர்கள்; எனக்குப் புரிகிறது. தங்களைப் போலவே நானும் வைதிக நெறியைப் பின்பற்றுகிறவனே! அந்த நெறிக்கு அப்பாற்பட்ட ஈடுபாடுகளில் எனது பிறப்பை நான் மறந்துவிடவில்லை. தெளிவாகவே சொல்கிறேன். அவள் ஒரு யூதப் பெண். பெயர் யூஜியானா. யூதர்களின் மதக்கோட்பாடுகள் நம்முடையவை போல் அவ்வளவு கட்டுப்பாடானவையல்ல..... ஆகவே, அவளை மதம் மாற்றுவது என்பது கடினமானதல்ல. ஆனால், நான் சேர நாட்டு மன்னன் என்ற நிலையில், அவளுடைய அந்தஸ்தென்ன ?''

'' நமது அந்தப்புரம் ஆயிரம்பேர்களை அனுமதிக்கும்; ஆனால் பட்டத்து ராணி ஒருத்திதான். பிறகு வருவோரெல்லாம் என்ன பெயரிட்டு அழைக்கப்படுவார்கள் என்று கேட்கிறீர்களா? இது வரையில் இந்த அரண்மனை அந்தப் பெயரைக் கேட்டதில்லையாதலால், உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை.''

''என்ன பெயர் அது?''

''ஆசை நாயகி.''

''இருக்கட்டுமே! உரிமைநாயகியிடம் ஆசை இல்லாத போது, ஆசை நாயகி உரிமை இல்லாது வருவதில் தவறில்லை. ஆனால், அப்போதும் மத மாற்றம் ஒரு கேள்விக்குறியாகுமா ?''

''ஆகாது. ஆனால், பிறக்கப்போகும் குழந்தை யூதக் குழந்தையாக வளருமா, சேரக் குழந்தையாக வளருமா? அதற்காகவே மத மாற்றம்தேவைப் படுகிறது.''

''தம்பிரான் சுவாமி, யூஜியானாவுக்குக் குழந்தை பிறக்கப் போவது தங்களுக்கு எப்படித் தெரியும் ?''

'' என்ன? அந்தப் பெண் கருவுற்றிருக்கிறாளா ?''

''சுவாமி, நான் ஒரு கேள்வி கேட்டால், நீங்கள் ஒரு கேள்வி கேட்கிறீர்களே!''

'' உதாரணத்துக்குச் சொல்லும் ஒன்று உண்மையாக இருக்கும் என்று எனக்கு எப்படித் தெரியும் ?''

''உண்மைதான். இந்த நிலையில் நான் செய்ய வேண்டியதென்ன ?''

''அவளை மதம் மாற்றி விடுவது ஒன்றே சரியான வழி. வர்மாக்கள் வம்சம் அந்தக் குழந்தையை அங்கீகரிக்க வேண்டுமானால், அவளும் சேரப் பெண்ணாகவே ஆகிவிடுவது நல்லது.''

'' அப்படி ஒரு சடங்கைப் பலர் அறியச் செய்ய வேண்டும் என்கிறீர்களா ?''

''யாரும் அறியாமல் வைத்திருக்கும் ஒருத்திக்குப் பலரறியச் சடங்கு செய்யச் சொல்வேனா ?''

''முண்டு கட்டி, கொண்டை போட்டுக் குங்குமமிட்டுப் பகவதி கோயிலுக்குச் சென்று வந்தால், அவளும் நம்முடையவள் ஆகிவிடுவாள் இல்லையா ?''

''அது போதுமே, நமது சமயம் ஒருத்தியை ஏற்றுக் கொள்ள!''

'' ஆனால் அதன் பிறகு அவளை யூதத் தெருவிலேயே வைத்திருப்பது அவளுக்குத் தொல்லையாகஇருக்குமே, சுவாமி!''

''அதற்காக அரண்மனைக்குக் கொண்டு வந்தால், செரோட்டித் தேவிக்குத் தொல்லையாக இருக்குமே, அரசே !''

''இரண்டும் இல்லாத ஓர் இடத்தில் அவளைக் குடியேற்றத் தாங்கள் அனுமதிப்பீர்களா ?''

'' இதிலே தலையிடுவதும் என் கடமைகளில் ஒன்றல்ல.''





''எல்லைப்புற மாளிகையை அவளுக்காக ஒதுக்க விரும்புகிறேன்.''

''அந்த உத்தரவில் நான் கையெழுத்திடுகிறேன்.''

நாராயண நம்பூதிரி இப்படிச் சொன்னதும் ஓர் ஆனந்தமான நிம்மதிப் பெருமூச்சுவிட்டார், மூன்றும் சேரமான்.

எல்லைப்புற மாளிகைக்குத் தாமே உடன் சென்று ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் போல் அவருக்குத் தோன்றிற்று. அதை உணர்ந்து கொண்ட நாராயண நம்பூதிரி விடைபெறும் போது, ''நான் மட்டும் தங்களை இங்கே தான் சந்திப்பேன்!'' என்று கூறிவிட்டுச் சென்றார். அதுவே பூஜியாளுவின் அந்தஸ்து என்ன என்பதைச் சேரமானுக்குப் புலப்படுத்திற்று.

உடனே அவர் சில பணியாட்களை அழைத்து எல்லைப்புற மாளிகையை அழகுபடுத்தச் சொன்னார். மாலைக்குள் அந்த அலங்காரம் முடிய வேண்டும் என்றும் உத்தரவிட்டார்.

சகல வசதிகளும் படைத்த ஒரு மன்னன் ஆணை இட்டால் வாராத பொருளெல்லாம் வரும் அல்லவா!

அலங்கார விளக்குகள், சலவைக் கல் நாற்காலிகள், வாசனைப் பொருள்கள், அற்புதமான பஞ்சணைகள் அனைத்தும் அங்கே குவிந்தன.

மாதர் விளையாடும் விளையாட்டுக் கருவிகள், அழகான தோழிப்பெண்கள் அனைவரும் குடியேறினர்.

பூத உணவு தயாரிக்கும் பணியாட்கள், கேரளப் பணியாட்கள் ஆகியோர் அமர்த்தப்பட்டனர்.

அந்தி மயங்கும் நேரத்தில் தன்னை அலங்கரித்துக் கொண்டு நின்றாள் பூஜியாளு.

இந்த ஏற்பாடுகளை அவள் அறிய மாட்டாள் என்றாலும், இரவில் வருவான் நாயகன் என்ற எண்ணத்தில், அழகு கொழிக்கும் பதுமையாக நின்றாள். அந்த அந்தி நேரத்திலேயே சிறிய பெட்டகம் ஒன்றைச் சுமந்தவாறு ஒரு ரதம் அவள் வீட்டு வாசலில் நின்றது. அதில் இருந்து அந்தப் பெட்டகத்தோடும், கையில் ஓர் ஓலைச் சுவடியோடும் இறங்கினான் தூதன் ஒருவன்.

நாதனைத் தேடிய நங்கை, தூதனைக் கண்டதும் ஓலையை வாங்கிப் பார்த்தாள்.

''கீதம் இனிய குயிலே,

தலைநகரிலேயே தலைவன் இருக்க ஏன் இந்த ஓலை என்று மயங்குகிறாயா?

தலைவன், தலைவியைச் சந்திக்கத் தயாராகிக் கொண்டிருக்கின்றான்.

தலைவியின் இல்லத்திலல்ல; தனியொரு மாளிகையில்.

உன்னை என் இல்லத்து மங்கல மடந்தையாக அமைச்சர் அங்கீகரித்து விட்டார். ஆனால், நமது உல்லாச வாழ்க்கைக்குச் சந்தடி நிறைந்த அரண்மனை ஏற்றதல்ல என்று, தனி மாளிகையில் வைக்க நான் விரும்பியதை அவர் ஏற்றுக் கொண்டுவிட்டார்.

இன்று இரவே அந்த ஆனந்த மாளிகையில் நாம் குடிபுகுகிறோம்.

ஆனால் ஒன்று. அதற்கு முன்னால் நான் இத்துடன் அனுப்பியிருக்கும் வெள்ளை நிற முண்டு கட்டி, கொண்டையிட்டு, மலர் முடித்து, குங்குமமிட்டுக் கொடுங்களூர் பகவதி அம்மன் கோவிலுக்கு நீ சென்று வர வேண்டும்.

இன்று முதல் என் காதல் தேவதை என் குலத்துப் பெண்ணாகிறாள். ஆகவே இந்தக் கோட்பாடுகளை நீ ஏற்றுக் கொண்டே தீர வேண்டும்.

இதே ரதத்திலேயே நீ பகவதி அம்மன் கோவிலுக்குச் சென்று அங்கிருந்து நேரே எல்லைப்புற மாளிகைக்கு வந்து விடு.''

ஓலையைப் படித்த யூஜியானா உற்சாகத்தில் மிதந்தாள்.

பெட்டகத்தைத் திறந்து பார்த்தாள்.

முண்டு கட்டி, கொண்டையிட்டுக் குங்குமம் வைத்தாள். அதே கோலத்தில் தன் தந்தையின் எதிரில் வந்து நின்றாள். யோகோவா இதை எதிர் பார்க்கவில்லை. அவரது யூத ரத்தம் சிறிது கவலைப்படத்தான் செய்தது.

இஸ்ரவேலின் தந்தச் சிலை, நல்ல விலைக்கு விற்பனையாகி விட்டது போல் அவருக்குத் தோன்றிற்று.

அவர் மௌனமாகத் தன்னைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்ட யூஜியானா, தான் கருவுற்றிருப்பதை மறைமுகமாக நினைவுபடுத்தினாள்.

ஒரு பெருமூச்சுவிட்ட யோகோவா தாமும் கொஞ்சம் குங்குமம் எடுத்து அவள் நெற்றியில் அணிவித்தார்.

''நீங்களும் என்னோடு மாளிகைக்கு வாருங்கள் அப்பா!'' என்று அழைத்தாள் யூஜியானா.

''இல்லையம்மா. முட்டை கப்பலேறிப் போனாலும், கோழி கூண்டிலே தான் இருக்கும். நீ சந்தோஷமாகச் சென்று வாழ்க்கை நடத்து'' என்று கூறி அவளை வழியனுப்பினார்.

அவள் ரதத்தில் ஏறி அமர்ந்ததும் தூதனைப் பார்த்து, ''பகவதி அம்மன் கோவிலுக்கு என்னென்ன கொண்டு செல்ல வேண்டும்?'' என்று கேட்டாள்.

''தேங்காய், பழம், புஷ்பம்'' என்றான் அவன்.

''ஓர் இடத்தில் நிறுத்தி அவற்றை வாங்கிக் கொள்'' என்றாள் அவள்.

''கோவிலுக்குப் பக்கத்திலேயே அவை கிடைக்கும்'' என்றான் அவன்.

ஒரு புதிய இந்துப் பெண்ணை வரவேற்பது போல் பகவதி அம்மன்கோவில் மணி ஓங்கி ஒலித்தது.

அங்காடியில் வண்டியை நிறுத்தினான் தூதன். அவன் இறங்கிப் பூஜைப் பொருள்கள் வாங்கிக் கொண்டிருந்த போது, நகரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்த சலீமா, ஜெபுன்னிஸா, யூசுப் மூவரும் அந்த வழியாக வந்தார்கள்.

சலீமா கண்களுக்குக் கீழே கறுப்புத் துணியால் மூடியிருந்தாள்.

ரதத்தில் உட்கார்ந்திருந்த யூஜியானாவைப் பார்த்த ஜெபுன்னிஸா சலீமாவின் காதைக் கடித்தாள்.

சலீமா அவளையே கூர்ந்து நோக்கினாள்.

தற்செயலாக யூஜியானாவும் அவளைப் பார்த்தாள்.

நான்கு கண்களும் போட்டியிடத் தொடங்கின. (தொடரும்)

GEMINI

# ஜெமினி டீ

## தேயிலைச் சுவையிலே ராஜ திலகம்




இதோ, செழுமைத் தேயிலை ஜெமினி.
நாவிலே நறுமண 'தர்பார்'—
கெட்டித் தேநீர் தந்திடும் ராசி—எனவே
கோப்பைகள் அதிகம் அளித்திடும்.
கொண்டாடத் தக்க சிக்கனம் இது.
ஜமாய்த்துப் பருகுவீர் இனி —

**ஜெமினி டீ**

**டாடா-ஃபின்லே படைப்பு**

dCA/TFGT/2e Tam.



# முடக்கு வாதத்தை முளையில் கிள்ளு

ஐந்து வயதுச் சிறுவனைத் தூக்கிக் கொண்டு வந்தாள் அவன் தாயார். "மூன்று நாட்களாக இவனுக்கு விட்டு விட்டுக் காய்ச்சல் வருகிறது, டாக்டர்! முழங்கால் வீங்கியிருக்கிறது. நடந்தால் நொண்டி வாங்குகிறது" என்று கூறித் தன் மகனின் முழங் காலைக் கட்டிக் காட்டினாள் அந்தப் பெண்மணி.

சிறுவனை ஸ்டெதஸ்கோப் மூலம் பரிசோதனை செய்ததில் அவனது இதயம் பாதிக்கப்பட்டுள்ளது தெரிந்தது. இதயத்தில் மைட்ரல் வால்வ் எனப்படும் வால்வ் ஒன்று இருக்கிறது. அது மூடிக் கொண்டுவிட்டதால் இரத்த ஓட்டம் தடைப்பட்டு இதயத்தின் இயக்கம் பாதிக்கப்பட்டு விட்டது. இந்த மைட்ரல் வால்வ் மூடிக் கொள்வதால் இதயத்தில் ஏற்படும் பிரத்தியேக ஒலியை ஸ்டெதஸ்கோப் நன்கு உணர்த்தும். இதற்கு முடக்கு வாத ஜுரம் (Rheumatic Fever) என்று பெயர். கொடிய வியாதிதான்.

**"இந்நோய் வரக் காரணம் என்ன? எந்த வயதினருக்கு வரக் கூடும்?"**

"தொண்டை பாதிக்கப்பட்டுப் புண்ணுவதால் இந்நோய் வருகிறது என்று ஒரு சித்தாந்தம். டான்ஸில் பாதிக்கப்படுவதாலும் வரக் கூடும். பொதுவாக இளம் பருவத்தினருக்குத்தான் வரும். பதினைந்து, பதினாறு வயது வரை வரக்கூடும். ஆனால் தொண்டைப் புண் பரவலாகப் பலருக்கு வருவதுண்டு. அப்படி வரும் எல்லாருக்குமே முடக்குவாத ஜுரம் வந்துவிடும் என்பதில்லை."

**"இதற்கு என்ன சிகிச்சை?"**

"முன் காலத்தில் ஆஸ்பிரின் — ஸோடியம் ஸாலிஸிலேட் கொடுப்பது வழக்கம். இப்போது 'கார்ட்டிஸோன்' சேர்த்துக் கொடுக்கப்படுகிறது. தொண்டை பாதிக்கப்பட்டு இந்நோய் வந்துள்ளது என்று திட்டவட்டமாகத் தெரிந்தால் பெனிசிலின் ஊசி போட்டுக் கொள்வது நல்லது. ஒரு முறை இந்நோய் வந்தால், மீண்டும் வராமல் இருக்க மூன்று வாரங்களுக்கு ஒரு முறை பென்ஸதைன் பெனிசிலின் மருந்து செலுத்த வேண்டும். தொடர்ந்து ஐந்து, ஆறு வருடங்களுக்கு இச் சிகிச்சை நீடிக்க வேண்டியிருக்கும். அதையும் மீறி, சில வருடங்களுக்குப் பிறகு நோய் திரும்பவும் வருவது உண்டு. மூடிக் கொண்ட இதய வால்வை இப்போது அறுவைச் சிகிச்சையின் மூலம் சீராக்கிவிட முடிகிறது. அறுவைச் சிகிச்சையால் உயிருக்கு ஆபத்து ஏதுமில்லை. என்றாலும் இதுவே முழுச் சிகிச்சை ஆகி விடாது. மருந்தும் தேவை. இந்நோய் கண்டவர்கள் குறைந்த பட்சம் ஒரு மாதமாவது படுக்கையிலிருந்து பூரண ஓய்வு பெற வேண்டும்."

**"இந்நோய் வராமல் தடுக்க என்ன வழி?"**

"சிறுவர்களுக்குத் தொண்டைப் புண் வந்தால் அலட்சியமாக இருந்து விடாமல் உடனே உரிய சிகிச்சை அளிக்க வேண்டும். பள்ளியிலிருந்து வீடு திரும்பும் சிறுவர், சிறுமியர் காலை மிகுதியாக வலிப்பதாகச் சொன்னால் பெற்றோர் உடனடியாக மருத்துவரிடம் அழைத்துச் சென்று காண்பிக்க வேண்டும். முடக்குவாத ஜுரம் காரணமாக இதயம் பாதிக்கப்பட்டவர்கள் (Rheumatic Heart) பதினைந்து வருடந்தான் உயிர் வாழ்வார்கள் என்று முன்பு கூறப்பட்டு வந்தது. அறுபது வருடங்களுக்கு மேலும் உயிர் வாழ்ந்தவர்கள் பலர் உண்டு. இதயத்தின் ஒரு பகுதியில் (Left Auricle) நோய் காரணமாக இரத்தம் சேர்ந்துவிடுவதால் நோயாளி நடக்கும்போது இரைக்கும். அது காரணமாக 'ஆஸ்துமா' என்று அவசரப்பட்டு முடிவு செய்துவிடக் கூடாது. சிலருக்கு இருமினால் இரத்தம் வெளிப்படும். அது காரணமாக டி. பி. (க்ஷயம்) என்றும் கருதிவிடக் கூடாது. சிலருக்கு ஈரல் பெரிதாகி விடுவதும் உண்டு. கால்களின் மூட்டுக்களில் மட்டுமின்றி முகத்திலுள்ள மூட்டுகளிலும் வீக்கம் ஏற்படலாம். தாமதம் செய்யாமல் சிகிச்சை பெற வேண்டியது முக்கியம்."

**டாக்டர் ஏ. எஸ். ஆர். கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**

---

**ஷூ பாலிஷ் போட்டு முடிந்த பிறகு ஒரு கிழிந்துபோன பட்டுத் துணியால் தேய்த்தால் பளபளப்பு அதிகமாக இருக்கும்.**

— டெக்கான் ஹெரால்ட் - பாபு



# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி விவசாய எந்திரக் கருவிகள்



இன்றே வளமடைந்தது இன்ப நாள் இதோ

முன்னேற்றத்தின் இரகசியம்—

## ஜோதி விவசாய எந்திரக் கருவிகள்

| | | | |
|---|---|---|---|
| ஜோதி மோட்டார் | ஜோதி வெர்ட்டிகல் டர்பைன் பம்பு | ஜோதி மூனிபிளக் பம்பு | ஜோதி த்ரெஷர் |
| ஜோதி ஸ்டார்ட்டர் | | | |

வேளாண்மையை ஒரு தொழிலாக மதிப்பவர் இன்றைய விவசாயி. எனவேதான், தரமான விவசாய எந்திரங்களை நாடுகிறார். ஜோதியின் அதி நவீன ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத உழைப்பின் பயனே ஜோதி விவசாய எந்திரக் கருவிகள். இதன் காரணமாகத்தான் ஜோதி பம்பு, மோட்டார், ஸ்டார்ட்டர், கதிரடிப்புக் கருவி, மற்றும் இதர விவசாய எந்திரங்களிலே முழு நம்பிக்கை வைத்திருக்கிறார் அவர். நெடுங்காலம் உழைப்பதோடன்றி, மின்செலவைக் குறைத்துதவுகின்றன இந்த எந்திரங்கள்.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

everest/27/JY-tm

கிளை: எயர் லைன்ஸ் ஹோட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 85007.

# ஏக் மஹல் ஹோ ஸப்னோங்கா!...



என்னதான் சிறந்த நடிகர்களைப் போட்டுக் கனவு காண வைத்தாலும், பழங் கதையைப் பழைய பாணியிலேயே எடுத்துக் கனவு மாளிகையைத் தகர்த்து விட்டார்கள். அதனால் தான் **ஒரு கனவு மாளிகை வேண்டும்** என்ற தலைப்பைச் சூட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். கதாநாயகி அருணாவின் பார்வை சீக்கிரமே மங்கிவிடும் என்று கதையில் ஒரு முடியைப் போட்டு, அதை அவிழ்க்க ஆஸ்பத்திரிப் பட்டியலில் ஒரே எண் தவறாக இரண்டு தடவை எழுதப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டாமல் இருந்தால் கதை போயே போயிருக்கும். இதன் பலனைக் கதாநாயகனுக்கு இன்னொரு காதலி முளைக்கிறாள். ஒருவருக்கொருவர் தியாகம் செய்யும் முனைப்பில் அருணா—சோனியாவாகவரும் ஷர்மிளா டாகுரும், வீணு சந்தாவர்க்கரும் பலஇடங்களில் நடிப்பைத் தியாகம் செய்வது கன ஜோர்! தர்மேந்திரா தாம் சண்டைக் காட்சிகளுக்குத் தான் லாயக்கு என்பது அதைக் காட்டிலும் கனஜோர்! அசோக் குமாரும், டேவிட்டும் உட்கார்ந்து பேசிப் பேசியே காலத்தை ஓட்டி விடுகிறார்கள். கனவு மாளிகையில் கண்ணில் படும்படியாக நடித்திருப்பவர் தேவன் வர்மா ஒருவர்தான்!

# தஸ் நம்பரி!

பத்து என்ற எண்ணைத் தம் மார்பில் தொங்க விட்டுக் கொண்டு மனோஜ்குமார் நிற்பது தலைப்புப் பொருத்தத்துக்காக மட்டும் அல்ல; பத்துக் கதைகளிலிருந்து பத்துச் சத விகிதம் எடுத்துக் கொண்ட பின்னரும், பத்து சதம் கூடத் தேறாத கதை என்பதைக் காட்டுவதற்குமாகும். மனோஜ்குமார் கண்ணாடி அணிந்து நின்று நின்றே கதையை ஓட்டி விடுகிறார். சண்டைக் காட்சிகளில் கூடக் கண்ணாடி தவறியும் விழவில்லை என்றால், ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாகப் பார்த்துப் பார்த்துப் படம் எடுத்திருக்கிறார்கள் என்று விளங்கும் அல்லவா?

ஆனால் ஹேமமாலினி அவரைப் போல் தம்மைக் காட்சிப் பொருளாக நிறுத்தவில்லை. நடிக்கக் கிடைத்த சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். அவரையும் விஞ்சிவிடுகிறது பிராணின் நடிப்புத் திறன். அவரையும் விஞ்ச வேண்டும் என்ற ஆர்வத்தில் பிரேம்நாத் அட்டகாசம் செய்து டைரக்டரையே ஆட்டிப் படைத்துவிட்டார்!

கதையைக் கசக்கிப் பிழிந்து படத்தைப் படுவேகமாக ஓட விட்டிருப்பதால், குற்றங் குறைகளை அசைபோட அவகாசம் கிட்டுவவதே குதிரைக் கொம்பாக இருக்கிறது. இந்தப் பெருமையைத் தட்டிக் கொண்டு போவதற்காகப் பத்து மதிப்பெண்கள் கூட்டிக் கொடுக்கலாம். — ஈ. வீ



# சிலம்புச் செல்வம்

ம. பொ. சி

கண்ணகி — கோவலர் திருமணம் முடிந்ததும் அவர்கள் வாழ்க்கை இன்பம் துய்க்கத் தொடங்கியதனை இளங்கோவடிகள் சுருக்கமாகக் கூறுகின்றார். வணிக வருணத்திலே— அவர்களிலும் கடலோடி வாணிபத்தில் தலைசிறந்து விளங்கும் குடும்பங்களிலே — பிறந்தவர்கள் நம் பூம்புகார் காதலர்கள்! அதனால் ஏழு அடுக்குகளைக் கொண்ட மாளிகையிலே நான்காம் அடுக்கில் குடியமர்த்தப்படுகின்றனர்.

ஏழு அடுக்குகளைக் கொண்ட மாளிகைகள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்திலே பூம்புகார், மதுரை, வஞ்சி போன்ற பெரு நகரங்களிலே ஏராளமாக இருந்தன என்று அறிகிறோம். இதனால் கட்டிடக் கலையில் அந்நாளைய தமிழர் திறமை பெற்றிருந்தனர் என்பதும் புலனாகிறது. ஏழு அடுக்குகளிலே ஏழாவது நிலைக்கு "முகில் தோய் மாடம்" என்று பெயர் சொல்கின்றன இலக்கியங்கள். "வேயா மாடம்" என்கிறார் இளங்கோ. "கூரை வேயாமல் விடப்பட்டுள்ள திறந்தவெளி" என்பது பொருள்.

ஏழுநிலை மாடத்துள் ஆறாவது நிலையானது, கோடைக் காலத்தில் தென்றல் காற்றை மாளிகைக்குள் அதிகமாகப் புகுத்துவதற்கேற்பப் பெரிய கண்களை யுடைய சாளரங்களைக் கொண்டதாம். ஐந்தாவது மாடம் குளிர் காலத்தில் வாடைக் காற்று அதிகமாக மாளிகைக்குள் புகாதபடி தடுத்து—குறைத்து —அனுப்புவதற்கேற்ப மான் கண் போன்ற சிறிய துவாரங்களையுடைய சாளரங்களைக் கொண்டதாம். நான்காவதாக உள்ள நடு நிலை மாடத்திலே பூம்புகார் காதலர்களின் முதல் இரவுச் சந்திப்பு நிகழ்ந்தது.

பள்ளியறையிலே கண்ணகியும் கோவலனும் உடல் இன்பம் துய்த்ததனை நேரடியாகவும், வெளிப்படையாகவும் கூறத் தயங்குகின்றது இளங்கோவின் எழுதுகோல். அவர் இளந்துறவி! அவரால் வருணிக்கப்படும் காப்பியத் தலைவி பத்தினித் தெய்வம்! இளங்கோவால் பயன்படுத்தப்பெறும் தமிழ் மொழி, ஒழுக்கத்தை வளர்க்கும் உயர் கருவி. அதனால் கண்ணகியும் கோவலனும் உடல் இன்பம் துய்த்ததனைக் காமரசம் கசியும் வகையிலே இளங்கோ வருணிக்கவில்லை. அதனை அடிகள் ஓர் உவமானத்தின் மூலம் விளக்குகிறார். "கோவலன் மார்பிலிருந்த மாலையும், கண்ணகியின் மார்பை அலங்கரித்த மாலையும் ஒன்றையொன்று தழுவி மயங்கின"—என்கிறார். மாலைகள் ஒன்றையொன்று தழுவின— என்று கூறி, மணமக்களின் உடல்கள் தழுவியதை உணர்த்துகிறார்.

உடல் இன்பம் துய்த்த பின்பு கண்ணகியும் கோவலனும் நிலவு பயன் துய்க்க வேயா மாடத்தை அடைந்தனர்.

அங்கே, கண்ணகியின்பால் கொண்ட காதல் காரணமாக அவளுடைய உடல் உறுப்புக்களை வருணிக்கின்றான் கோவலன். அதனை,

"தீராக் காதலின்
திருமுகம் நோக்கி,
கோவலன் கூறும்ஓர்
குறியாக் கட்டுரை"

என்கிறார் இளங்கோ! "குறியாக் கட்டுரை" என்று இளங்கோ கூறுவது கண்ணகியைப் பற்றிச் சொல்ல வேண்டியவற்றை முன்கூட்டி நினைத்துப் பாராமலே, அதைப் பற்றி ஒரு திட்டம் இல்லாமலே மனத்தில் பட்டவற்றையெல்லாம் கொட்டி மகிழுகிறான் இளங்கோ என்பதை உணர்த்தும்.

தமிழ் மூவேந்தர்களின் போர்த் தந்திரம் ஒன்றை இளங்கோ நமக்கு நினைவூட்டுகின்றார். தன் பகை மன்னன் ஒருவன், அவனுடைய பகை வேந்தன் நாட்டின் மீது படையெடுத்தால், அந்தப் படையெடுப்புக்கு ஆளான மன்னனுக்குப் போர்க் கருவிகள் கொடுத்து, தன்னுடைய பகைவனை அவன் பகைவனைக் கொண்டே வீழ்த்திவிடுவது தமிழ் வேந்தர்களின் போர்த் தந்திரமாம்! அந்தத் தந்திரப்படி, தங்கள் பகைவனான என்னை — கண்ணகியுடன் யான் நடத்தும் காதற் போரிலே வீழ்த்திட எண்ணி, காமனும் இந்திரனும் கந்தப் பெருமானும் தத்தம் போர்க் கருவிகளைக் கண்ணகியின் புருவமாகவும், இடையாகவும் கண்களாகவும் படைத்துவிட்டனர் — என்கிறான் கோவலன்.

இன்னும் என்னென்னவெல்லாமோ சொல்லிக் கோவலன் கண்ணகியைப் புகழ்ந்தானாம். அதனை, "உலவாக் கட்டுரை பல பாராட்டி" என்ற சொல்லால் சுட்டுகின்றார் இளங்கோ. பொருளற்ற சொற்களால் வருணித்தானாம் கோவலன். மாதவியைக் காண்பதற்கு முன்பு மாசற்ற பொன்னாக, வலம்புரி முத்தாக, காசறு விரையாக, கரும்பாக, தேனாகக் கோவலனுக்குக் காட்சி அளித்தாள் கண்ணகிதேவி. சோதனையில் தேறாத காதல் மன்னன் கோவலன். அதனால்தான், அவனுடைய வருணனையை, "பொருளற்ற கட்டுரை" என்கிறார் கவிஞர். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

# க்ராக்ஜாக் 'ருசிப் போர்'




## சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

# பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!



REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு



